# தேசீய தமிழ் வாசகம்

## மூன்றாம் புத்தகம்




T. P. கோபால கிருஷ்ணன், B.A., L.T.,
தலைமை ஆசிரியர், போர்டு உயர்நிலைப்பள்ளி, போளூர்.

வர்தா பதிப்புக் கழகம்
திருவல்லிக்கேணி : : சென்னை

[விலை 0–7–0

முதற் பதிப்பு—1[illegible]9
மறு பதிப்பு—195[illegible]

APPROVED FOR CLASS USE
BY THE TEXT-BOOK COMMITTEE, MADRAS
*Vide Page 29 of Fort St. George Gazette*
*Part I-B dated 7-5-52*






Kabeer Printing Works, Madras (2166)

# முன்னுரை

தேசீய தமிழ் வாசகம் என்னும் பெயருடன் வெளிவரும் இந் நூல் வரிசை கல்வித் துறையினர் வெளியிட்ட பாடத்திட்டத்தைத் தழுவி எழுதப்பட்டதாகும். பாட இயலின் நோக்கத்திற்கிணங்க, ஒவ்வொரு பாடமும், பிள்ளைகளின் உள நிலை, அவர்களுக்கேற்படும் விருப்பம் இவற்றை ஒட்டி, பிள்ளைகள் நன்கு அறிந்திருப்பவை களைக் கொண்டே எழுதப்பட்டுள்ளது.

மொழிநடை சிறு பிள்ளைகளுக்கு ஏற்ற வண்ணம் கவனத்துடன் அமைக்கப்பட்டுள்ளது. பயிர்த்தொழில், கைத்தொழில், வரலாறு, இலக்கியம், கடிதம் எழுதும் முறை, ஒழுக்கமாக நடக்கும் முறை, பெரியோர் வரலாறு, கதை, நாடகம் முதலியவை பற்றிய பாடங்கள் இதில் இடம் பெற்றுள்ளன. வகுப்புக்கு ஏற்ற அளவு பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

பாட இயலிற் குறித்தவாறு புதிய சொற்கள் பாடந்தோறும் ஈற்றில் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாட இறுதியிலும் அரும் பொருள் தரப்பட்டுள்ளது. இதன்பின் பாடங்களைத் தழுவிய கேள்விகள் இணைக்கப்பட்டுள்ளன.

இறுதியாகத் தரப்பட்டுள்ள பயிற்சிகள் மிகுந்த கவனத்துடன் எழுதப்பட்டுள்ளன. இவை, பிள்ளைகளின் அறிவை விளக்கவும் பெருக்கவும் தகுந்தவாறு அமைந்திருக்கின்றன. பாட இயலிற் கண்டுள்ளவாறு, வகுப்புக்கேற்ற வகையில், சிறு அளவு இலக்கண விளக்கம் எளிய முறையில்-பிள்ளைகள் மனத்தில் பதியும் வகையில் த ப்பட்டுள்ளது.

பொதுவாக, இந்நூல் வரிசை, பிள்ளைகளின் அறிவை வளர்த்து முற்போக்கு பெறச்செய்யும் கருத்துடன் தக்க முறையில் எழுதப் பட்டுளது என்று கூறலாம். அறிஞர் இந்நூல் வரிசையை வரவேற்று ஆதரவு நல்கும்படி வேண்டுகிறேன்.

இப்புத்தகங்களைத் தயாரிப்பதில் எனக்கு உதவிபுரிந்த புலவர் திரு. பு. செல்வராசன் அவர்கட்கும், புலவர் திரு. சி. செல்வத் தாண்டவன் அவர்கட்கும் எனது நன்றி உரியதாகும்.

T. P. கோபாலகிருஷ்ணன்

# பொருளடக்கம்

# தேசீய தமிழ் வாசகம்

## மூன்றும் புத்தகம்



## 1. எங்கள் ஊர்

1. எங்கள் ஊரில் ஒரு குன்று இருக்கிறது. அதனால் எங்கள் ஊர் **குன்றத்தூர்** என்று பெயர் பெற்றது. இவ்வூர் சென்னைக்குப் பதினைந்து கல் தொலைவில் இருக்கிறது. குன்றத்தூர் நீர்வளம், நில வளம் நிறைந்த ஊர்; சோலைகளும் சாலைகளும் சூழ்ந்த ஊர். எங்கள் ஊரில் தெருக்கள் மேடு பள்ளம் இல்லாமல் இருக்கின்றன. வீடுகள் வரிசை வரிசை யாய் இருக்கின்றன.

2. புகைவண்டி நிலையம் எங்கள் ஊரில் இல்லை. எங்கள் ஊருக்குப் பஸ்களில் போகலாம். எங்கள் ஊரில் ஊர் ஆட்சி மன்றம் இருக்கிறது. அது ஊருக்கு வேண்டும் பொது நன்மைகளைக் கவனித்து வருகிறது. அதனால் எங்கள் ஊர் சுத்தமாயும் அழகாயும் இருக்கிறது. எங்கள் ஊரில் ஒரு தபால் நிலையம் இருக்கிறது.

3. நெசவுத் தொழில் எங்கள் ஊரில் சிறப்பாய் நடைபெறுகிறது. தச்சர், கருமார், கன்னார், மண்பாண்டம் செய்வோர் முதலியவர்களும் எங்கள் ஊரில் இருக்கின்றனர். இவர்களால் சில கைத்தொழில்கள் நடைபெறுகின்றன.

4. உழவுத் தொழிலில் எங்கள் ஊர் மக்கள் மிகவும் கவனம் செலுத்துகிறார்கள். ஊரைச் சுற்றி நன்செய், புன்செய் நிலங்கள் இருக்கின்றன. ஏரி நீர் வாய்க்கால்கள் மூலம் பயிர்களுக்குப் பாய்கிறது. தோட்டங்களில் காய்கறிகள் பயிராகின்றன. சோலைகளில் பூக்கள் கொத்துக் கொத்தாய்ப் பூக்கின்றன. எங்கள் ஊர் அழகு உடையது ; வளம் பொருந்தியது.

| | | |
|---|---|---|
| தொலைவில் | சாலை | நன்செய் |
| அழகான | சூழ்ந்த | புன்செய் |
| நிலவளம் | நெசவுத் தொழில் | ஊர் ஆட்சி மன்றம் |
| நீர்வளம் | கருமார் | தபால் நிலையம் |
| கவனித்து | கன்னார் | பொது நன்மை |
| சோலை | கைத்தொழில் | கொத்துக்கொத்தாய் |

### அருஞ்பொருள்

கல் - மைல். தொலைவில் - தூரத்தில். வளம் - செழிப்பு. நிலையம் - ஆபீஸ். ஊர் ஆட்சி மன்றம் - பஞ்சாயத்துச் சபை.

### கேள்விகள்

1. 'குன்றத்தூர்' என்று ஏன் பெயர் வந்தது?
2. இவ்வூர் சென்னையிலிருந்து எவ்வளவு தொலைவில் இருக்கிறது?
3. குன்றத்தூர் எவ்வாறு அமைந்துள்ளது?
4. ஊரைச் சுத்தமாய் வைத்திருக்கும் மன்றம் எது?
5. குன்றத்தூரில் உள்ள தொழிலாளர்கள் யாவர்?
6. அங்கு உழவுத்தொழில் உண்டா? என்னென்ன பயிராகின்றன?

### பயிற்சி

I. 1. உன் கிராமத்தைப்பற்றி பத்து வரிகளில் சுருக்கி எழுது.

2. ஊர் ஆட்சி மன்றத்தைப்பற்றி உனக்குத் தெரிந்தவற்றை எழுது.

3. தொலைவில், சுத்தமாய், அழகாய், தச்சர், கன்னர்— இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்.

II. 1. தக்க எதிர் சொற்களை எடுத்து நேர் நேராக எழுது.

| | |
|---|---|
| தொலைவில் | குறைந்த |
| இருக்கிறது | மேடு |
| நிறைந்த | அருகில் |
| பள்ளம் | கெட்ட |
| நல்ல | இல்லை |

2. வரிசை வரிசையாக—இது அடுக்குத்தொடர். இதுபோல உனக்குத் தெரிந்த நான்கு தொடர்களைக் கூறு.



## 2. எங்கள் வீட்டுத் தோட்டம்

1. எங்கள் வீட்டுத் தோட்டம் மிகவும் பெரியது. அது எங்கள் வீட்டின் பின்புறத்தில் இருக்கிறது. தோட்டத்தின் கிழக்கு மூலையில் ஒரு துரவு இருக்கிறது. அந்தத் துரவில் தண்ணீர் எப்போதும் வற்றுது. தோட்டத்திற்கு அந்தத் துரவிலிருந்து தண்ணீர் பாய்கிறது. துரவிலிருந்து தண்ணீர் பாய்ச்ச ஏற்றம் இருக்கிறது.

2. எங்கள் வீட்டுத் தோட்டம் நான்கு பிரிவு களாய்ப் பிரிக்கப்பட்டு இருக்கிறது. முதற் பிரிவில் கத்தரி, வெண்டை, தக்காளி முதலிய செடிகள் இருக்கின்றன. உருளைக்கிழங்கு, முள்ளங்கிச் செடிகளும் இருக்கின்றன. இவற்றின் கிழங்குகள் நிலத்திற்கு அடியில் வேரில் விளைகின்றன.

3. இரண்டாம் பிரிவில் அவரை, சுரை, பாகல், பூசனி, புடலை முதலிய காய்கள் காய்க்கும் கொடிகள் இருக்கின்றன. பூசனிக் கொடி, சுரைக் கொடி இரண்டும் தரையில் படர்கின்றன. வேறு கொடிகள் பந்தலில் படர்கின்றன.

4. மூன்ரும் பிரிவில் கீரைப் பாத்திகள் இருக்கின்றன. சிறுகீரை, பருப்புக்கீரை, முளைக்கீரை முதலிய பல கீரைகள் பயிராகின்றன. நான்காம் பிரிவில் மல்லிகை, ரோஜா, சாமந்தி, கனகாம்பரம் முதலிய பூச்செடிகள் இருக்கின்றன.

5. எங்கள் வீட்டுத் தோட்டத்தில் நாங்கள் எல்லோரும் வேலை செய்கிரேம். தந்தையார் தண்ணீர் இறைப்பார், தாயார் பாத்திகளில் தண்ணீர் பாயச் செய்வார். அண்ணன் மண்வெட்டியால் பாத்திகள் அமைப்பார்; களைகள் எடுப்பார். நானும் அவர்களோடு இருந்து உதவி செய்வேன்.

6. நாங்கள் காய்கள், கீரைகள், பூக்கள் முதலியவற்றை விற்பனை செய்கிரேம்; எங்களுக்கு நல்ல வருமானம் கிடைக்கிறது. நாங்கள் சுகமாய் வாழ்கிரேம்.

| | | |
|---|---|---|
| துரவு | வேரில் | அமைப்பார் |
| வற்ருது | படர்கின்றன | களை |
| தக்காளி | பாத்திகள் | வருமானம் |
| முள்ளங்கி | மண்வெட்டி | சுகமாய் |

## அரும்பொருள்

துரவு - கிணறு. வற்ருது - குறையாது. களை - பயிருக்குக் கெடுதி செய்யும் புல் பூண்டுகள்.

## கேள்விகள்

1. இப்பாடத்தில் கூறப்பட்டுள்ள தோட்டம் எத்தனை பிரிவு களாய்ப் பிரிக்கப்பட்டு இருக்கிறது ?
2. ஒவ்வொரு பிரிவிலும் என்னென்ன விளைகின்றன ?
3. தோட்ட வேலைகளை யார் யார் செய்கின்றனர் ?
4. தோட்ட வேலையால் நீ அடையும் பலன் என்ன ?
5. உன் வீட்டுத் தோட்டம் எங்கிருக்கிறது ? அதில் என் னென்ன இருக்கின்றன ?

## பயிற்சி

I. 1. உனக்குத் தெரிந்த ஐந்து காய்கள், ஐந்து கீரைகள், ஐந்து மலர்கள் இவற்றின் பெயர்களை எழுது.

2. உன் வீட்டில் தோட்டமிருந்தால் நீ என்னென்ன செய் வாய் ? பத்து வரியில் விளக்கு.

3. மண்வெட்டி, களைகள், பாத்திகள், விற்பனை, வருமானம் —இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

II. 1. கண்ணன் எப்போதும்—என்பது இரண்டு சொற் களால் ஆனது; இது சொல் தொடர் எனப்படும். ஆனால் இதில் பொருள் முடியவில்லை.

2. கண்ணன் எப்போதும் படிக்கிருன்—என்பது மூன்று சொற்களால் ஆனது. இதில் பொருள் முடிந்துவிட்டது. இப்படிப் பொருள் முடிந்து நிற்கும் சொல் தொடர் வாக்கியம் எனப்படும். பொருள் முடிந்த வாக்கியத்தின் முடிவில் ஒரு புள்ளி (.) வைக் கிரேம். பொருள் முடிந்துவிட்டது என்று காட்டவே இந்தப் புள்ளி வைக்கிரேம். இதற்கு முற்றுப்புள்ளி என்பது பெயர்.



## 3. எங்கள் பள்ளிக்கூடம்

1. எங்கள் ஊரில் ஒரு பள்ளிக்கூடம் இருக்கிறது. அதில் ஐந்து வகுப்புகள் இருக்கின்றன. ஐந்து ஆசிரியர்கள் இருக்கின்றார்கள். ஒவ்வொரு வகுப்பிலும் முப்பது பிள்ளைகள் படிக்கின்றார்கள்.

2. எங்கள் பள்ளிக்கூடக் கட்டடம் உறுதியானது; நாங்கள் அனைவரும் சுகமாய் உட்கார்ந்து படிக்க வசதி உடையது. அங்குக் காற்று நன்றாய் வீசும். சுவர்கள் வெள்ளை அடிக்கப்பட்டுச் சுத்தமாய் இருக்கின்றன.

3. பிள்ளைகள் ஒவ்வொரு வகுப்பிலும் பலகை மீது உட்காருகின்றனர். ஆசிரியர் நாற்காலியில் உட்காருகிறார். அவருக்கருகில் கரும்பலகை ஒன்று இருக்கிறது. அதில் எழுதச் சீமைச் சுண்ணம்புக் கட்டி

களும், கரும்பலகை துடைக்கும் நீலத் துண்டும் பக்கத்தில் இருக்கின்றன.

4. பத்து மணிக்குப் பள்ளிக்கூடம் துவக்கம் ஆகிறது. முதலில் கடவுள் வணக்கம் நடைபெறுகிறது. அது முடிந்ததும் ஆசிரியர்கள் பாடங்களைக் கற்பிக்கின்றனர். நாங்கள் எல்லாப் பாடங்களையும் தமிழில் படிக்கின்றோம். எங்கள் ஆசிரியர் தெளிவாய்க் கற்பிக்கிறார். நாங்களும் நன்றாய்ப் படிக்கிறோம்.

5. எங்கள் பள்ளிக்கூடத்தில் ஒரு கடிகாரம் இருக்கிறது. அதில் பன்னிரண்டு எண்கள் இருக்கின்றன. ஒவ்வோர் எண்ணும் ஒரு மணியைக் குறிக்கின்றது. கடிகாரத்தில் இரண்டு முட்கள் இருக்கின்றன. பெரிய முள் நிமிஷம் காட்டும். சிறிய முள் மணியைக் காட்டும். பெரிய முள் பன்னிரண்டு எண்களையும் சுற்று வரும் நேரமே ஒரு மணி. அப்பொழுது சிறிய முள் ஓர் எண்ணிலிருந்து அடுத்த எண்ணுக்குப் போகும். இருபத்து நான்கு மணி நேரம் ஒருநாள். இவைகளை எங்கள் ஆசிரியர் கற்பித்தார். எங்களுக்குக் கடிகாரத்தில் மணி பார்க்கத் தெரியும்.

6. எங்கள் பள்ளிக்கூடத்தில் நல்ல நூல் நிலையம் இருக்கிறது. பள்ளிக்கூடத்திற்குப் பின்புறம் தோட்டம் இருக்கிறது. அங்கே நாங்கள் செடிகளைப் பயிராக்குகிறோம்; தோட்டவேலை செய்கிறோம். பள்ளிக்கூடத்திற்கு முன்புறம் திறந்த வெளியிடம் இருக்கிறது. நாங்கள் அங்கு விளையாடுகின்றோம்.

| | | |
|---|---|---|
| கட்டடம் | சீமைச் சுண்ணும்பு | துவங்குகிறது |
| வசதி | நீலத் துண்டு | வெளியிடம் |
| உறுதியான | கரும்பலகை | கடிகாரம் |

## அரும்பொருள்

துவக்கம் - ஆரம்பம். வெளியிடம் - மைதானம்.

## கேள்விகள்

1. உன் பள்ளிக்கூடத்தில் எத்தனை வகுப்புகள் இருக்கின்றன?
2. வகுப்பு அறையில் என்னென்ன பொருள்கள் இருக்கின்றன ?
3. பள்ளிக்கூடம் எப்போது துவங்குகிறது ?
4. பள்ளியில் முதலில் என்ன நடைபெறுகிறது ?
5. கடிகாரம் என்பது என்ன ?—விளக்கமாகக் கூறு.
6. உன் பள்ளிக்கூடத்தில் வேறு என்னென்ன பொருள்கள் இருக்கின்றன ?

## பயிற்சி

I. 1. ஆசிரியர், வகுப்பு, பிள்ளை, சுகமாய், வசதி, சுவர்கள், சுத்தமாய், தரை, கடிகாரம், தோட்டம்—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறு.

2. கடிகாரத்தில் மணி மூன்றரை என்றால், முட்கள் எப்படியிருக்கும் ?

II. 1. பின்வருபவைகளில் உள்ள வாக்கியங்களைக் காட்டு :—

(1) ஐந்து ஆசிரியர்கள் இருக்கின்றார்கள்
(2) வகுப்பில் பிள்ளைகள் தரையில்
(3) முப்பது பிள்ளைகள் படிக்கின்றார்கள்

2. இவ்வாக்கியங்களுக்கு முற்றுப்புள்ளி இடு :—

எங்கள் வீட்டுத் தோட்டம் பெரியது அதில் கத்திரி காய்க்கிறது வெண்டை காய்க்கிறது மல்லிகை பூக்கிறது



## 4. எங்கள் ஊர்ச்சந்தை

1. எங்கள் ஊரைச் சுற்றிலும் பல கிராமங்கள் இருக்கின்றன. எங்கள் ஊரே அக்கிராமங்களைவிடப் பெரியது. எங்கள் ஊரில் வீடுகள் மிகுதி ; மக்கள் தொகையும் அதிகம்.

2. எங்கள் ஊரில் ஒரு சந்தைப்பேட்டை இருக்கிறது. அங்கு ஒவ்வொரு வெள்ளிக்கிழமையிலும் சந்தை கூடும். அந்த நாளில் எங்கள் ஊரில் வெளியூர் மக்கள் நடமாடிக்கொண்டு இருப்பார்கள்.

3. பல கிராமங்களிலும் பயிராகும் காய்கறிகள், கீரை வகைகள், தானியங்கள் சந்தையில் விற்கப்படும். கூடைகள், மண்பாண்டங்கள், துணிகள், பாத்திரங்கள், எண்ணெய் வகைகள், அரிசி, நிலக்கடலை, பலவகையான தின்பண்டங்கள், உப்பு, புளி, மிளகாய், சிகைக்காய் முதலிய பொருள்களும் சந்தை

யில் விற்கப்படும். சிலர் பலவிதமான புத்தகங்களை விற்பார்கள்.

4. கடைகள் இல்லாத கிராம மக்கள் மேல் சொன்ன பொருள்களைச் சந்தையில் வாங்குவார்கள்; ஒரு வாரத்திற்கு வேண்டும் காய்கறிகளை வாங்கிக் கொள்வார்கள்.

5. பல ஊரார் கலந்துபேசவும், பழகவும் சந்தை உதவி செய்கிறது. பல ஊர் வியாபாரிகள் சந்தை விற்பனைக்காகவே பற்பல விதமான பொருள்களைக் கொண்டு வருகின்றனர். இதனால் வியாபாரிகள் பலன் பெறுகின்றனர்; மக்களும் தங்களுக்கு வேண்டும் பொருள்களைப் பெறுகின்றனர்; பல ஊர்களில் பயிராகும் பொருள்களும் செய்யப்படும் பொருள்களும் விற்பனை ஆகின்றன.

6. சந்தையால் வியாபாரம் வளர்கிறது. உழவர்களும், குடிசைத் தொழிலாளரும் பலன் பெறுகின்றனர்.

| | | |
|---|---|---|
| மிகுதி | நடமாடிக்கொண்டு | சிகைக்காய் |
| சந்தை | நிலக்கடலை | வியாபாரிகள் |
| பாத்திரங்கள் | தின்பண்டங்கள் | அனைத்தும் |

அரும்பொருள்

மிகுதி - அதிகம். நிலக்கடலை - வேர்க்கடலை. குடிசைக் கைத்தொழிலாளர் - மண்பாண்டம் செய்வோர், மனை, அகப்பை செய்வோர் முதலியவர்கள்.

## கேள்விகள்

1. சந்தை என்பது என்ன ?
2. சந்தையில் என்னென்ன கிடைக்கும் ?
3. சந்தையால் கிராமத்தாருக்கு என்ன நன்மைகள் உண்டாகின்றன ?
4. சந்தையால் பலன் பெறுபவர்கள் யாவர்.?

## பயிற்சி

I. 1. நீ பார்த்த சந்தையைப்பற்றிப் பத்து வரிகள் எழுது.

2. பாவாடைத்துணி, காராபூந்தி, ஆரஞ்சுப் பழம், முருங்கைக்காய், அரிசி, கடுகு—இவை எங்கெங்கு விற்கப்படும் ?

3. சந்தை, கலந்துபேச, பழக, வர்த்தகர், விற்பனை, பலன் பெறுகின்றனர், நிலக்கடலை—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

4. இவற்றைப் பொருத்தமாகச் சேர்த்துப் படி :—

| | |
|---|---|
| 1. தூங்கும்போது | கண்ணீர் வருகிறது |
| 2. சாப்பிட்டு முடிந்த உடனே | குறட்டை வருகிறது |
| 3. அழும்போது | ஏப்பம் வருகிறது |

II. 1. ஊர், கிராமம், வீடு, மக்கள், சந்தை, காய், கறி, கீரை, தானியம், கூடை, துணி—இவை பல பொருள்களின் பெயர்கள். இப்படி ஏதேனும் ஒரு பொருளின் பெயராய் வருவது பெயர்ச் சொல் எனப்படும்.

2. கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்களை எடுத்துக் கூறு :—

(1) பிள்ளைகள் பலகையில் உட்காருகின்றனர். (2) ஆசிரியர் நாற்காலியில் உட்காருகிறார். (3) ஞாயிற்றுக்கிழமை பள்ளி இல்லை. (4) தை மாதம் பொங்கல் வருகிறது.



## 5. ஜவாஹர்லால் நெஹ்ரு

1. இவரை உங்களுக்குத் தெரியுமா? இவர்தான் நமது இந்திய நாட்டின் முதல் அமைச்சர். இவர் பெயர் ஜவாஹர்லால் நெஹ்ரு.

2. இவர் நன்ருய்ப் படித்தவர்; சிறந்த அறிவாளி; கேட்பவர் மனம் கவருமாறு ஆங்கிலத்திலும் தாய்மொழியிலும் பேசும் திறமை உடையவர்; பேசுவது போலவே எழுதவும் ஆற்றல் உடையவர்.

3. இவர் செல்வம் மிகுந்த குடும்பத்தில் பிறந்தார். இவருடைய பெற்ருேர் இவரைச் சீராட்டிப் பாராட்டிச் செல்வமாய் வளர்த்தார்கள். அவ்வாறு வளர்ந்த இவர் பின்னர்ப் பல முறை சிறை சென்ருர்.

4. இவர் ஏன் சிறை செல்லவேண்டும்? நம் நாடு வெள்ளேயரிடம் அடிமையாய் இருந்தது. நாம் அனைவரும் அடிமைகளைப் போல வாழ்ந்தோம். இந்த அடிமை வாழ்க்கையை ஒழித்து, நம் நாட்டை வெள்ளேயரிடமிருந்து விடுதலை செய்ய, ஒரு பெரிய உரிமைப் போர் நம் நாட்டில் நடந்தது. அதில் இவர் கலந்துகொண்டார். அதனுல் வெள்ளேயர் அரசாங்கம் இவரைப் பலமுறை சிறையில் வைத்தது. நாட்டு நன்மைக்காக இவர் தம் செல்வ வாழ்க்கையை மறந்து, பல துன்பங்களை அனுபவித்தார்.

5. இன்று நம் நாடு இத்தகைய பல தலைவர்களின் உழைப்பால் விடுதலை அடைந்துவிட்டது. இவர் விடுதலை அடைந்த நம் நாட்டின் முதல் அமைச்சராய் விளங்குகிருர்; நம் நாட்டின் முன்னேற்றத்திற்காக இரவு பகல் ஓயாமல் உழைக்கிருர். இவருடைய உழைப்பால் நம் நாடு முன்னேறிவருகிறது.

**வாழ்க ஜவாஹர்!**

| | | |
|---|---|---|
| ஜவாஹர்லால் நெஹ்ரு | ஆற்றல் | விடுதலை |
| அமைச்சர் | செல்வம் | உரிமை |
| அறிவாளி | சீராட்டி | துன்பம் |
| கவருமாறு | பாராட்டி | அனுபவித்தல் |
| ஆங்கிலம் | சிறை | உழைப்பு |
| தாய்மொழி | வெள்ளேயர் | ஓயாமல் |
| திறமை | அடிமை | முன்னேறி |

### அரும்பொருள்

அமைச்சர் - மந்திரி. கவருமாறு - மனத்தை இழுக்கும்படி. ஆற்றல் - திறமை.

### கேள்விகள்

1. ஜவாஹர்லால் என்பவர் யாவர் ?
2. அவருக்கு உள்ள திறமைகள் என்னென்ன ?
3. அவர் எப்படி வளர்க்கப்பட்டார் ?
4. அவர் ஏன் பலமுறை சிறை சென்றார் ?
5. இன்று அவர் என்ன செய்கிறார் ?

### பயிற்சி

I. 1. தெரியுமா, அமைச்சர், அறிவாளி, தாய்மொழி, பெற்றோர், சீராட்டி, பாராட்டி, செல்வமாக, விடுதலை, துன்பம், உழைப்பு—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. முதல் × கடைசி, படித்தவர் × படிக்காதவர், பேசும் × பேசாத, செல்வம் × வறுமை—இவை எதிர்ச் சொற்கள். இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

II. முற்றுப்புள்ளி வை :—

1. கந்தன் கடைக்குப் போனான் கமலம் கரும்பு வாங்கினாள் பலராமன் பாடம் படித்தான் முருகன் முறுக்கு வைத்திருக்கிறான் சீதை அதைக் கேட்கிறாள்.

2. இப்பாடத்தில் முதல் ஏழு வரிகளில் உள்ள பெயர்ச் சொற்களை எடுத்துக் கூறு.

3. கோடிட்ட இடங்களில் பொருத்தமான சொற்களை அமைத்துப் படி :—

(1) மீன் ———— வாழும். (ஆகாயத்தில், குளத்தில்)
(2) சிங்கம் ———— வாழும். (வீட்டில், காட்டில்)
(3) ஆகாயம் ———— நிறம். (கருமை, நீலம்)
(4) கடல் நீர் ———— (இனிப்பு, உவர்ப்பு)
(5) நட்சத்திரம் ———— மின்னுகிறது. (பகலில், இரவில்)

# 6. இரட்டைச் சொற்கள்

1. கண்ணகி **கலகல** என்று சிரித்தாள்.
2. வேலன் **வழவழ** என்று பேசினான்.
3. சோறு **குழகுழ** என்று இருக்கிறது.
4. மரங்கள் **மளமள** என்று முறிந்தன.
5. தண்ணீர் **தளதள** என்று கொதிக்கிறது.
6. வளையல் **பளபள** என்று மின்னுகிறது.
7. முருகன் **மடமட** என்று நடந்தான்.
8. தவலை **தடதட** என்று உருண்டது.
9. கோமளம் **குடுகுடு** என்று ஓடினாள்.
10. கற்கண்டை **நறநற** என்று மென்றான்.
11. திம்மன் **திருதிரு** என்று விழித்தான்.
12. சுண்ணும்பு **வெள்ளைவெளேர்** என்று இருக்கிறது.
13. இலைகள் **பச்சைப்பசேல்** என்று இருக்கின்றன.
14. காக்கை **கன்னங்கறேல்** என்று இருக்கிறது.
15. இரத்தம் **செக்கச்செவேல்** என்று இருக்கிறது.

| | | |
|---|---|---|
| கலகல | பளபள | நறநற |
| வழவழ | மின்னுகிறது | திருதிரு |
| குழகுழ | மடமட | வெள்ளைவெளேர் |
| மளமள | தடதட | பச்சைப்பசேல் |
| முறிந்தன | உருண்டது | கன்னங்கறேல் |
| தளதள | குடுகுடு | செக்கச்செவேல் |
| கொதிக்கிறது | தவலை | கற்கண்டு |

## பயிற்சி

I. 1. கடகட, சரசர, சலசல, படபட—இவைகளைத் தனித்தனி வாக்கியத்தில் அமைத்துச் சொல்.

2. உனக்குத் தெரிந்த இன்னும் நான்கு இரட்டைச் சொற்களைக் கூறு.

3. பச்சைப்பசேல், செக்கச்செவேல்—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்.

4. படபட, கடகட, கிடுகிடு, வெள்ளைவெளேர், பச்சைப் பசேல், செக்கச்செவேல்—இவற்றைக் கீழே கோடிட்ட இடங்களில் தக்கபடி அமைத்துக் கூறு :—

(1) பால் ———— இருக்கிறது.
(2) கீரை ———— இருக்கிறது.
(3) மிளகாய் வற்றல் ———— இருக்கிறது.
(4) மங்களம் ———— பேசினாள்.
(5) வண்டி ———— ஓடியது.
(6) உடம்பு குளிரால் ———— நடுங்கியது.

II. 1. வேலன், கண்ணகி, வழவழ, தண்ணீர், மடமட, வளையல், படபட, கோமளம், தடதட, இலை, பச்சைப்பசேல், காக்கை, இரத்தம்—இவை என்ன சொற்கள் ?

2. சிரித்தான் × அழுதான்—இவை எதிர்ச்சொற்கள். பின்வரும் சொற்களுக்கு எதிர்ச் சொற்கள் கூறு :—

(1) இருக்கிறது ×
(2) பல ×
(3) மிகுதி ×
(4) கீழே ×
(5) முன்புறம் ×



## 7. பாம்பைக் கொன்ற காகம்

1. ஒரு காகம் மரப்பொந்து ஒன்றில் கூடு கட்டி இருந்தது. அம்மரத்தின் அடியில் ஒரு பாம்புப் புற்று இருந்தது. அப்புற்றில் ஒரு பாம்பு குடி இருந்தது.

2. காகம் தன் கூட்டில் முட்டை இட்டது. அது இரைதேடப் போனபிறகு, பாம்பு மரத்தின்மீது ஏறி, அந்த முட்டைகளைக் குடித்துவிட்டது; காகம் திரும்பு வதற்குள் மரத்தைவிட்டு இறங்கிப் புற்றில் பதுங்கி விட்டது. இவ்வாறு பலமுறை நடந்தது. காகம் தன் முட்டைகளைப் பாம்பு குடிக்காதபடி காக்க வழி தெரி யாமல் வருந்தியது.

3. காகத்திற்கு ஒரு நரி நண்பனுய் இருந்தது. காகம் வருத்தத்தோடு இருப்பதை நரி பார்த்தது;

வருத்தத்திற்குக் காரணம் கேட்டது; காரணம் தெரிந்த பின், ஒரு தந்திரம் கூறியது.

4. நரி கூறிய தந்திரப்படி, காகம் அவ்வூர் அரசி குளிக்கும் குளத்திற்குச் சென்றது. அரசி குளத்தில் இறங்கிக் குளித்துக் கொண்டிருந்தாள். அவள் தன் முத்துமாலையைக் கழற்றிக் கரைமீது வைத்திருந்தாள். காகம் அந்த முத்துமாலையை, அரசி பார்க்கும்படி தூக்கி வந்தது.

5. உடனே அரண்மனைக் காவலர் அதனைத் துரத்தி வந்தனர். காகம் முத்துமாலையைப் புற்றில் போட்டது. அதைக் காவலர் கண்டனர்; புற்றை இடித்தனர். புற்றிலிருந்து பாம்பு சீறிக்கொண்டு வெளியில் வந்தது; காவலர் அப்பாம்பைக் கொன்றனர்; முத்துமாலையை எடுத்துச் சென்றனர்.

6. நரி கூறிய தந்திரம் இப்படிப் பலித்தது. காகத்தின் எதிரியான பாம்பு மாண்டது. பிறகு காகம் கவலை அற்றுச் சுகமாய் வாழ்ந்தது.

| | | |
|---|---|---|
| பொந்து | வருத்தத்தோடு | முத்துமாலை |
| கூடு | காரணம் | துரத்தி |
| புற்று | தந்திரம் | இடித்தனர் |
| இரை | பலித்தது | சீறி |
| இடும் | குளிக்கும் | மாண்டது |
| குடித்து | அரசி | கவலை |

அரும்பொருள்

பொந்து - மரத்திலுள்ள இடுக்கு. இரை - உணவு.

## கேள்விகள்

1. காகம் ஏன் வருத்தமாய் இருந்தது ?
2. நரி சொல்லிக்கொடுத்த தந்திரம் யாது ?
3. பாம்பு எப்படி மாண்டது ?
4. நீ இக்கதையினால் அறிவது யாது ?

## பயிற்சி

I. 1. பொந்து, பாம்பு, புற்று, முட்டை, இரை, பதுங்கி, குடித்து, தந்திரம், குளம்—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. இவை வசிக்குமிடங்களைக் கோடிட்ட இடங்களில் குறிப்பிடு :—

(1) காகம் —— வசிக்கும்.
(2) பாம்பு —— வசிக்கும்.
(3) நரி —— வசிக்கும்.
(4) மனிதன் —— வசிப்பான்.

II. 1. இவற்றைப் படி :—

(1) பாம்பு சீறுகிறது.
(2) குழந்தை அழுதது.
(3) அண்ணன் படிக்கிறான்.

மேலே உள்ள மூன்று வாக்கியங்களில் தடித்த எழுத்திலுள்ள சொற்களைக் கவனி. பாம்பு என்ன செய்கிறது என்று கேட்டுப் பார். சீறுகிறது என்று பதில் வருகிறதல்லவா ? இது பாம்பு செய்யும் வேலையை அல்லது வினையைக் குறிக்கிறது. எனவே, வேலையைக் குறிக்கும் சீறுகிறது என்னும் இச்சொல் வினைச் சொல் எனப்படும். இதைப் போலவே, அழுதது, படிக்கிறான் என்னும் சொற்களும் வினைச் சொற்களே ஆகும்.

2. இப்பாடத்தின் முதல் ஐந்து வரிகளில் உள்ள வினைச் சொற்களை எடுத்துக் கூறு.

# 8. ஔவை

(பாட்டு)

1. ஔவைக் கிழவி நம்கிழவி ;
அமுதின் இனிய சொற்கிழவி ;
செவ்வை நெறிகள் பற்பலவும்
தெரியக் காட்டும் பழங்கிழவி.

2. கூழுக் காகக் கவிபாடும்
கூனக் கிழவி ; அவளுரையை
வாழும் வாழ்வில் ஒருநாளும்
மறவோம், மறவோம், மறவோமே.

—தேசிக விநாயகம் பிள்ளை

| | | |
|---|---|---|
| அமுது | பற்பல | கூனக்கிழவி |
| செவ்வை | கூழுக்காக | மறவோம் |
| நெறிகள் | பழங்கிழவி | இனிய |

### அரும்பொருள்

1. அமுதின் - பாலைவிட. செவ்வை - நல்ல. நெறிகள் - வழிகள்.

2. கவி - பாடல். கூனக் கிழவி - கூன்வளைந்த கிழவி. உரையை - சொல்லை.

### கேள்விகள்

1. ஔவைக் கிழவியின் சொற்கள் எப்படிப்பட்டவை ?
2. அவர் காட்டும் நல்வழிகள் யாவை ?
3. அவர் எதற்குக் கவிபாடினர் ?
4. அவருக்கு கூனக்கிழவி என்று ஏன் பெயர் வந்தது ?

## பயிற்சி

I. 1. கிழவி, அமுது, இனிய, தெரிய, பற்பல, காட்டும், கூழ், கூனக்கிழவி, வாழ்வு, மறவோம்—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. ஔவைக் கிழவியைப்பற்றி உனக்குத் தெரிந்ததை ஐந்து வரிகளில் எழுது:

3. எதிர்ச் சொற்கள் கூறு :—

(1) கிழவி × குமரி
(2) இனிய ×
(3) பற்பல ×
(4) பழம் ×
(5) வாழ்வு ×

II. 1. ஒரு பொருளின் பெயரைக் குறிப்பது பெயர்ச் சொல் என்று படித்தீர்கள் அல்லவா? அதே போல, ஒரு பொருளின் வேலையை அல்லது வினையைக் குறிப்பது வினைச்சொல் என்று படித்தீர்கள்.

கந்தன் பாடம் படித்தான் என்பதில் கந்தன் செய்யும் வேலை படித்தான் என்பது. இப்படி வேலையைக் காட்டும் சொற்கள் அனைத்தும் வினைச் சொற்கள் எனப்படும்.

2. போ, வா, படித்தான், நட, விடு, வந்தான், சிரித்த, ஓடினான், கண்ட, வாங்கினாள், இருந்த, எடுத்தான்—இவை வினைச் சொற்கள். இவைபோல, இன்னும் பத்து வினைச் சொற்களைக் கூறு.



## 9. பயிர்த்தொழில்

1. நெல், கேழ்வரகு, கம்பு, சோளம் முதலியவை தானியம் எனப்படும். இவற்றைப் பயிரிடுதல் பயிர்த்தொழில் ஆகும். பயிர்த்தொழில் செய்பவர் **உழவர்** எனப்படுவர்.

2. உழவர்களே உலகத்தில் உள்ளவர்களுக்கு உணவு அளிக்கின்றனர்கள். உழவர் பயிர் செய்யாவிடில், நமக்கு உணவு கிடைக்காது. நாம் எல்லோரும் பட்டினியால் துன்பப்படுவோம். இதனால் பயிர்த்தொழில் மற்றத் தொழில்களைவிட முக்கியமானது என்பது தெரிகிறது அல்லவா?

3. பயிர்த்தொழில் செய்வதற்கு நல்ல நிலம் வேண்டும்; தண்ணீர் வேண்டும்; உழைக்க மனிதர் வேண்டும். அந்த மனிதருக்கு வேண்டிய உழவுக்

கருவிகள் வேண்டும். இவை எல்லாம் நம் நாட்டில் இருக்கின்றன.

4. பயிர் விளையும் நிலம் **நன்செய், புன்செய்** என இருவகைப்படும். **நன்செய்** நிலத்தில் நெல் விளையும். **புன்செய்** நிலத்தில், கேழ்வரகு, கம்பு, சோளம், தினை, சாமை, உளுந்து, முதலியவை விளையும். நன்செய் நிலத்திற்குத் தண்ணீர் மிகுதியாய் வேண்டும்; புன்செய் நிலத்திற்குக் குறைவாய் இருத்தல் போதும்.

5. நம் நாட்டில் இப்போது பயன்படுவன பழங்காலக் கலப்பையும், ஏருமே ஆகும். உழவர்கள் புதிய இயந்திரக் கலப்பைகளைப் பயன்படுத்தினால் விளைச்சல் இன்னும் மிகுதியாகும்.

6. பயிர்த்தொழிலே நம் நாட்டின் உயிர் நாடி ஆகும். உழவர்களே நமக்கு உணவு அளிக்கும் உத்தமர்கள். உழவர்களை நாம் மதித்துப் போற்ற வேண்டும்.

"உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம்"—பாரதியார்

| | | |
|---|---|---|
| பயிர்த்தொழில் | துன்பம் | உயிர்நாடி |
| உழவர் | சாமை | உத்தமர் |
| பட்டினி | இயந்திரக் கலப்பை | வணக்கம் |
| வந்தனை | கேழ்வரகு | உளுந்து |

## அரும்பொருள்

கருவிகள் - ஏர், கலப்பை, பரம்பு முதலியன. பயன் - உபயோகம். உத்தமர்கள் - மேலானவர்கள். வந்தனை - வணக்கம்.

## கேள்விகள்

1. நன்செய், புன்செய் : பொருள் என்ன ?
2. நெல் எங்கு விளையும் ?
3. பயிர் தொழிலுக்கு என்னென்ன வேண்டும் ?
4. புன்செய்த் தானியங்கள் என்பவை எவை ?

## பயிற்சி

1. உழவர், உத்தமர், கலப்பை, விளைச்சல்—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறு.

2. குறைவு × நிறைவு, நல்ல × கெட்ட, போற்றுதல் × தூற்றுதல்—இவை எதிர்ப் பதங்கள்.

நன்செய், துன்பம், பழங்காலம், புதிய—இவற்றிற்கு எதிர்ப்பதங்கள் கூறு.

3. பின்வருபவைகளில் பெயர்ச் சொற்கள், வினைச் சொற்கள் எவை என எடுத்துக் கூறு.

நன்செய், புன்செய், தெரிகிறது, விளையும், இருக்கின்றன, நெல், கேழ்வரகு, சிரிக்கிருன், உளுந்து, கலப்பை, ஏர், உழவர், படுக்கிருன், ஓடுகிருன்.



## 10. உலோகங்கள்

(உரையாடல்)

**கண்ணன் :** அண்ணு, கால்அணு எதைக்கொண்டு செய்யப்பட்டது ?

**அண்ணன் :** தம்பீ, அது செம்பைக் கொண்டு செய்யப்பட்டது.

**கண்ணன் :** செம்பு என்பது என்ன ?

**அண்ணன்:** அது ஓர் உலோகம். பூமியில் இருந்து, செம்பு, இரும்பு, ஈயம், தகரம், வெள்ளி, பொன் என்பன எடுக்கப்படுகின்றன. மனிதர் அவற்றைக் கொண்டு நாணயங்கள், பாத்திரங் கள், நகைகள் செய்கிருர்கள்.

**கண்ணன் :** விளக்கமாகச் சொல்.

**அண்ணன் :** இரும்புக் கரண்டி, எண்ணெய்ச் சட்டி, அரிவாள், ஆணி, லாடம் முதலியன இரும் பால் ஆனவை. செப்புத் தவலே, செப்புக் குடம், செப்புக் கரண்டி, பாத்திரங்கள் என்பன செம் பால் ஆனவை. செப்புப் பாத்திரங்களில் களிம்பு ஏருமல் இருக்க ஈயம் பூசுவார்கள். ஈயப்பாத்திரங்

கள் சமையலுக்குப் பயன்படும். தகரத்தைக் கொண்டு டப்பா, பெட்டி, குவளை முதலியன செய்வார்கள். வெள்ளியும், பொன்னும் விலை உயர்ந்தவை. அவை நகைகளும் பாத்திரங்களும் நாணயங்களும் செய்யப் பயன்படும்.

**கண்ணன் :** 'பித்தளை' என்று சொல்லுகிறார்களே, அது என்ன?

**அண்ணன் :** செம்பும் துத்தநாகம் என்னும் உலோகமும் சேர்ந்தது பித்தளை. பித்தளையால் பாத்திரங்கள் செய்யலாம். நம் வீட்டில் இருக்கும் அண்டா, தவலை, டம்ளர், சிறு பாத்திரங்கள் முதலியவை பித்தளைப் பாத்திரங்களே ஆகும்.

**கண்ணன் :** 'வெண்கலம்' என்கிறார்களே, அது என்ன?

**அண்ணன் :** அது பித்தளையைப்போல ஒரு கலப்பு உலோகம். அது செம்பும் வெள்ளீயமும் கலந்தது. வெண்கலப் பாத்திரத்தில் களிம்பு ஏறாது. அதற்கு ஈயம் பூசத் தேவையில்லை. பித்தளை, செப்புப் பாத்திரங்களுக்கு ஈயம் பூசவேண்டும்.

### அரும்பொருள்

| | | |
|---|---|---|
| உலோகம் | லாடம் | பித்தளை |
| ஈயம் | களிம்பு | துத்தநாகம் |
| ஆணி | டப்பா | வெண்கலம் |

அரிவாள் - கத்தி. லாடம் - மாடு, குதிரை ஆகியவைகளுக்குக் காலின் அடியில் குளம்பில் அடிப்பது.

## கேள்விகள்

1. இப்பாடத்தில் வந்துள்ள உலோகங்களின் பெயர்கள் எவை?
2. கலப்பு உலோகங்கள் எவை?
3. பாத்திரங்கள் செய்யப் பயன்படும் உலோகங்கள் எவை?
4. நகைகள் செய்யப் பயன்படும் உலோகங்கள் எவை?
5. நாணயங்கள் செய்யப் பயன்படும் உலோகங்கள் எவை?

## பயிற்சி

I. 1. உன் வீட்டில் உள்ள பாத்திரங்கள் எந்தெந்த உலோகங்களால் செய்யப்பட்டவை என்று விசாரித்துச் சொல்.

2. உன் வீட்டில் உள்ள இரும்புச் சாமான்கள் எவை?

3. உன் வீட்டில் உள்ள பொன்னுலான பொருள்கள் எவை?

4. உன் வீட்டில் உள்ள வெள்ளிச் சாமான்கள் எவை?

5. இவற்றைப் படி :—

(1) இரும்பு—இரும்புக் கடை—இரும்புச் சாமான்கள்
(2) பித்தளை, செம்பு, வெண்கலம்—பாத்திரக் கடை.
(3) ஈயம்—ஈயப் பாத்திரக் கடை.
(4) பொன், வெள்ளி—நகைக் கடை.

II. 1.

காகம், புறு — இவை பறவைகளின் பெயர்கள்
நரி, பூனை — இவை மிருகங்களின் பெயர்கள்
கிராமம், ஊர் — இவை இடங்களின் பெயர்கள்
தலை, கை — இவை உறுப்புகளின் பெயர்கள்
இரவு, பகல் — இவை காலத்தின் பெயர்கள்
ஆசிரியர், ஔவை — இவை மனிதரின் பெயர்கள்
பொன், வெள்ளி — இவை பொருள்களின் பெயர்கள்

இவ்வாறு பலவற்றின் பெயர்களைக் காட்டும் சொற்கள் பெயர்ச் சொற்கள்.

2. உனக்குத் தெரிந்த மூன்று பொருள்களின் பெயர்கள், மூன்று இடங்களின் பெயர்கள், மூன்று உறுப்புகளின் பெயர்கள்—இவற்றைக் கூறு.

## 11. நீ செய்ய வேண்டியவை

1. நீ போகும் வழியில், ஆணி, முள், கண்ணுடித் துண்டுகள், வாழைப்பழத்தோல் முதலியவை கிடந்தால், அவற்றை உடனே எடுத்துக் குப்பைத் தொட்டியில் போட்டுவிடவேண்டும்.

2. தெருவில் இடப்புற ஓரமாகவே, எதிரில் பார்த்து நடந்து போகவேண்டும்.

3. தெருவின் குறுக்காகப் போகவேண்டுமானுல், சற்று நின்று, இரண்டு புறமும் வரும் வண்டிகளைக் கவனித்த பிறகே போகவேண்டும்.

4. தாய், தந்தையர்களையும் பெரியவர்களையும் ‘ நீங்கள் ’, ‘ தாங்கள் ’ என்று மரியாதையாய் அழைக்க வேண்டும்.

5. பெரியவர்கள் ஏதாவது கேட்டால், பணிவுடனும் மரியாதையுடனும் பதில் சொல்லவேண்டும்.

6. வகுப்பு அறையிலோ, வீட்டிலோ, தரையில் ஏதாவது பொருள் விழுந்து கிடந்தால், அதைஎடுத்து மேசைமீது வைக்கவேண்டும்.

7. நாள்தோறும் பள்ளியிலிருந்து வீடு சென்றதும் சிறிது நேரம் விளையாடியபின், பாடங்களைப் படிக்க வேண்டும். தெரியாதவைகளை வீட்டிலுள்ள பெரியவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும்.

8. சாப்பிடுமுன் கை கால்களைக் கழுவிச்சுத்தம் செய்து கொள்ள வேண்டும். சாப்பிட்ட உடனே கை கால்களைக் கழுவி, ஒரு துணியினால் துடைத்துக் கொள்ள வேண்டும். சாப்பிட்ட உணவின் சிறு துணுக்குகள் பற்களின் இடுக்கில் இல்லாதபடி வாயை நன்ருய்க் கொப்பளித்துக் கழுவிக்கொள்ளவேண்டும்.

9. தெருவில் போகையில் எச்சில், சளி இவை களைத் தெரு ஓரம் சென்று துப்பவேண்டும். மூக்கைச் சிந்திஞலும் ஓரமாகச்சென்று, யார் மேலும்படாதபடி சிந்தவேண்டும்.

| | | |
|---|---|---|
| முள் | குறுக்காக | இடுக்கில் |
| கண்ணுடித் துண்டு | மரியாதையுடன் | இல்லாதபடி |
| குப்பைத்தொட்டி | பணிவு | கொப்பளிக்க |

## அரும்பொருள்

பணிவுடன் - அடக்கத்துடன். துணுக்குகள் - சிறுதுண்டுகள். இடுக்கில் - இரண்டு பற்களுக்கு நடுவிலுள்ள சந்தில்.

## கேள்விகள்

1. தரையில் ஊசி விழுந்து கிடந்தால் நீ என்ன செய்ய வேண்டும் ?
2. நீ தெருவில் எந்தப் பக்கம் நடக்க வேண்டும் ?
3. நீ தெருவின் குறுக்கே போகவேண்டுமானுல் என்ன செய்யவேண்டும் ?
4. நீ பெரியவர்களிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் ?
5. நீ பள்ளியிலிருந்து வீடு சென்றதும் என்ன செய்ய வேண்டும் ?
6. நீ சாப்பிட்டவுடன் என்ன செய்யவேண்டும் ?

## பயிற்சி

I. 1. ஆணி, தாய், இடப்புறம், வலப்புறம், குறுக்காக, மரியாதை, கொப்பளி, சுத்தம்—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துக் கூறு:

(1) தாய் தந்தையரை —— அழைக்க வேண்டும்.

(2) தெருவில் —— இருந்தால் அதைக் குப்பைத் தொட்டியில் போடு.

(3) வீடு சென்றவுடன் சிறிது —— பின் ——.

(4) வாயை நன்ருய்க் —— வேண்டும்.

II. குன்று, மேடு, பள்ளம், சோலை, மூக்கு, கண், ஏரி, துரவு, கிழமை, வாரம், இரவு, பகல், சென்னை, கிராமம், வாய், காலை, தேதி —இவை என்ன பெயர்கள் ? கட்டத்தில் பொருத்திக் காட்டு.

| காலப் பெயர் | இடப் பெயர் | பொருள் பெயர் | சினைப் பெயர் |
|---|---|---|---|
| | | | |

# 12. சிங்கமும் சுண்டெலியும்

(படப் பயிற்சி)



## பயிற்சி

I. படத்தைப் பார்த்துக் கதையைச் சொல்.

II. கீழ் வரும் கேள்விகளுக்கு விடை கூறு :—

1. சிங்கம் என்ன செய்துகொண்டிருந்தது ?
2. சுண்டெலி என்ன செய்தது ?
3. சிங்கம் கோபித்து என்ன சொல்லியிருக்கும் ?
4. சுண்டெலி என்ன சொல்லியிருக்கும் ?
   (நீயே யோசித்துச் சொல்)
5. பிறகு சிங்கத்திற்கு என்ன துன்பம் வந்தது ?
6. சுண்டெலி சிங்கத்திற்கு எவ்வாறு உதவிற்று ?

III. 1. இக்கதையைச் சிங்கம் சொல்வதுபோலச் சொல்.

2. இக்கதையைச் சுண்டெலி சொல்வதுபோலச் சொல்.

IV. 1. கீழ் வரும் சொற்றொடர்களில் உள்ள பெயர்ச் சொற்களையும் வினைச் சொற்களையும் எடுத்து எழுது :—

சேணியர் துணி நெய்கிறார்.
திருவள்ளுவர் திருக்குறள் எழுதினார்.
சூரியன் ஒளி தருகிறது.

2. பொருத்தமான சொற்களைச் சேர்த்து எழுது :—

| | |
|---|---|
| கீரி | குட்டி |
| கோழி | கன்று |
| பசு | பிள்ளை |
| நாய் | குஞ்சு |



(By Courtesy—P. I. B.)

## 13. போலீஸ்காரரர்

1. இவரை நீ பார்த்தது உண்டா? இவர் போலீஸ்காரரர். நான்கு பெரிய தெருக்கள் சந்திக்கும் இடங்களில் இவர் நிற்பதைப் பார்க்கலாம். சில சமயங்களில் இவர் நம் தெருக்கள் வழியாகவும் போவார்.

2. நகரில் அமைதியை உண்டுபண்ணுவது இவர் வேலை. எங்காயினும் சண்டை நடந்தால் இவர் வந்துவிடுவார்; சண்டைபோடுகிறவர்களைப் பிடித்துத் துக் கொண்டு போவார். இவரைக் கண்டதும் கலகம்

செய்கிறவர்களும் சண்டை இடுபவர்களும் அமைதி யாய் இருந்துவிடுவார்கள்.

3. திருடுவது, சூதாடுவது, தெருவை அசுத்தப் படுத்துவது, தெருவில் கோலி ஆடுவது, பட்டம் விடுவது, பிறரை ஏமாற்றிப் பொருள் பறிப்பது முதலி யவைகளை இவர் தடுப்பார். இவர், இத்தகைய வேலை களைச் செய்பவர்களைக் கண்டால், உடனே பிடித்துக் கொள்வார்; போலீஸ் நிலையத்திற்கு அழைத்துச் சென்று கொட்டடியில் அடைப்பார்; மறுநாள் நீதி மன்றத்தில் நிறுத்தி, தண்டனை பெறும்படி செய்வார்.

4. பொதுமக்கள் கூட்டங் கூட்டமாய்க் கூடும் மாநாடுகள், திருவிழா முதலிய இடங்களில் இவர் வந்து இருந்து எவ்விதக் குழப்பமும் தொல்லையும் உண்டாகாதபடி காவல் செய்வார்; குழந்தைகள் காணுமற் போனல் கண்டுபிடித்துக் கொண்டுவந்து சேர்ப்பார்; பொருள்கள் காணுமற்போனலும் இவரிடம் கூறினல், கூடியவரை முயன்று கண்டு பிடித்துக் கொடுப்பார்.

5. போலீஸ்காரரர் உண்மையில் ஒரு பொது நலத் தொண்டரே ஆவார். இவர் பொது மக்களு டைய நன்மைக்காகவே உழைக்கிறார். மக்களுக்கு எந்த விதமான துன்பமும் நேரிடாமலும், மக்கள் தீய வழியில் நடக்காமலும் காக்கிறவர் போலீஸ்காரரே. இரவும் பகலும் நம் நன்மைக்காகவே உழைக்கும் போலீஸ்காரருக்கு நாம் நன்றி செலுத்துவோமாக.

| | | |
|---|---|---|
| போலீஸ்காரர் | சந்திக்கும் | அமைதி |
| சண்டை | கலகம் | திருடுவது |
| சூதாடுவது | கோலி | பட்டம் |
| ஏமாற்றிப்பறிப்பது | கொட்டடி | நீதிமன்றம் |
| தண்டனை | திருவிழா | தொல்லை |
| குழப்பம் | பொதுநலத்தொண்டர் | நேரிடாமல் |
| தீயவழி | நன்றி | மாநாடு |

## அரும்பொருள்

அமைதி - சமாதானம். பறிப்பது - பிடுங்கிக்கொள்வது. கொட்டடி - போலீஸ் நிலையத்திலுள்ள சிறை. பொதுநலத் தொண்டர் - பொது மக்களுடைய நன்மைக்காக உழைப்பவர். தீயவழி - கெட்டவழி.

## கேள்விகள்

1. நாம் போலீஸ்காரரை எங்குக் காணமுடியும் ?
2. அவருடைய வேலை என்ன ?
3. அவர் எவற்றைத் தடுப்பார் ?
4. அவர் யாரைக் கொட்டடியில் அடைப்பார் ?
5. அவர் எங்கெங்குக் காவல் காப்பார் ?
6. நாம் ஏன் அவருக்கு நன்றி செலுத்தவேண்டும் ?

## பயிற்சி

I. 1. சந்திக்கும், அமைதியை, சண்டை, கலகம், பட்டம் விடுவது, நீதிமன்றம், திருவிழா, கூட்டங்கூட்டமாய், காணுமற் போனல், தொல்லை, நன்மைக்காக—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்.

2. பார்த்தது × பார்க்காதது, பெரிய × சிறிய, போவார் × போகார், அமைதி × குழப்பம்—இவை எதிர்ச் சொற்கள். இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்.

## 14. பழமொழிகள்

1. காலை மாலை நூலை ஓது.
2. இளமையிற் கல்வி சிலையில் எழுத்து.
3. கற்றோர்க்குச் சென்ற இடம் எல்லாம் சிறப்பு.
4. யானைக்கும் அடி சறுக்கும்.
5. யானை கபடு; பூனை திருடு.
6. பணம் பந்தியிலே, குலம் குப்பையிலே.
7. பாராத பயிர் பாழ்.
8. நீர் உயர நெல் உயரும்.
9. உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை.
10. அகத்தின் அழகு முகத்தில் தெரியும்.
11. உண்ணலும் உறங்கலும் அளவுடன் செய்.
12. அச்சமும் நாணமும் அறிவிலிக்கு இல்லை.
13. அடாது செய்தால் படாது படுவான்.
14. பேராசை பெரு நஷ்டம்.
15. ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?
16. செய்வன திருந்தச் செய்.
17. நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.

| | | |
|---|---|---|
| ஓது | பந்தி | நாணம் |
| இளமையில் | ஒப்பில்லை | அறிவிலி |
| சிலையில் | அகத்தின் | அடாது |
| சிறப்பு | உண்ணல் | பேராசை |
| சறுக்கும் | உறங்கல் | வளையாதது |
| கபடு | அச்சம் | செய்வன |

### அரும்பொருள்

ஓது - படி. இளமையில் - சிறுவயதில். சிலையில் - கல்லில் (எழுதிய). சிறப்பு - பெருமை. ஒப்பில்லை - சமமில்லை. அகத்தின் - மனத்தின். உண்ணல் - சாப்பிடுதல். உறங்கல் - தூங்குதல். அச்சம் - பயம். நாணம் - வெட்கம். அறிவிலி - புத்தியில்லாதவன். அடாது - செய்யத் தகாத செயலை. வளையாதது - ஒழுங்கு பெருதது. செய்வன - செய்யும் வேலைகளை.

### கேள்விகள்

1. கல்வி பற்றிய பழமொழிகள் எவை ?
2. உழவுத் தொழிலின் சிறப்பை விளக்குபவை எவை ?
3. அதிகம் தூங்கக் கூடாதென்னும் பழமொழி எது ?
4. அறிவிலிக்கு எது எது இல்லை ?
5. எவன் பெரு நஷ்டம் அடைவான் ?

### பயிற்சி

I. 1. உனக்குத் தெரிந்த வேறு ஐந்து பழமொழிகளை எழுது.

2. பொருத்தமானவற்றைச் சேர்த்துப் படி :—

| | |
|---|---|
| 1. இரட்டைக் குளம்பு உடையது | குதிரை |
| 2. கடிவாளம் தரிப்பது | மாடு |
| 3. துதிக்கை உடையது | குயில் |
| 4. தோகை விரித்து ஆடுவது | யானை |
| 5. இனிமையாகக் கூவுவது | மயில் |

II. 1. இராமன், கண்ணன், ஜான், ரஹீம் என ஆணைக் குறிக்கும் பெயர்கள் ஆண்பால் பெயர்கள் எனப்படும். சீதை, தமிழரசி, மேரி எனப் பெண்ணைக் குறிக்கும் பெயர்கள் பெண் பால் பெயர்கள் எனப்படும்.

2. பின்வரும் சொற்களில் உள்ள ஆண்பால் - பெண்பால் பெயர்களைக் குறிப்பிடு :—

கந்தன், கமலா, முருகன், வள்ளி, கண்ணகி, வந்தாள், போனுள், அவள், எவன், உண்டான்.



## 15. கிராம சுகாதாரம்

1. குப்பன் நல்ல பையன்; நாள் தவருமல் பள்ளிக்குச் செல்வான்; மாலையில் சில பிள்ளை களுடன் வீட்டுக்கு வருவான்.

2. ஒருநாள் மாலை குப்பன் தன் தோழர் களுடன் வீட்டுக்கு வருகையில் ஒரு மாடு அவனை முட்டித்தள்ளி விட்டது. குப்பனுக்குக் கை கால்களில் அடி பட்டு இரத்தம் ஒழுகியது. அவன் தந்தையார் இதைக் கேள்விப்பட்டு ஓடிவந்தார்; குப்பனை மருத்துவ மனைக்குக் கொண்டுபோனர்.

3. மருத்துவ மனையில் ஒரு மருத்துவர் இருக் கிருர். இரண்டு தாதிகள் இருக்கின்றுர்கள். மருந்து களைக் கூட்டிக் கலவை செய்துகொடுக்க மற்ருெருவர் இருக்கிருர்.

4. எங்கள் ஊர் மருத்துவர் மிகுந்த திறமை உடையவர்; அன்பு உடையவர்; எவரிடத்திலும் சிரித்துக்கொண்டே பேசுவார். தாதிகளும் நோயாளிகளை அன்பாய் நடத்துவார்கள். இவர்கள் உதவியால் குப்பன் விரைவில் சுகமடைந்தான்.

5. எங்கள் ஊர் மருத்துவர் சுகாதாரத்தில் கவலை கொண்டவர். “கிராமத் தெருக்கள் சுத்தமாய் இருக்க வேண்டும்; வீடுகளைச் சுத்தமாய் வைத்துக் கொள்ள வேண்டும்; குப்பை கூளங்களை வீட்டிற்குப் பக்கத்திலே கொட்டக்கூடாது; தண்ணீரைக் குட்டை குட்டையாய் நிற்கவிடாமல் பள்ளங்களை மூடிவிட வேண்டும்; காய்ச்சி ஆறிய தண்ணீரையே குடிக்க வேண்டும்; நாள்தோறும் குளிக்கவேண்டும்; துவைத்த ஆடைகளை அணிய வேண்டும்,” என்று அவர் கிராமத்தாருக்கு அடிக்கடி கூறுவார். கிராமத்தாரும் மருத்துவர் கூறியபடி சுத்தமாய் இருப்பார்கள். அதனால் எங்கள் ஊரில் நோய்கள் வருவதில்லை.

**சுத்தம் சுகம் தரும்**

| | | |
|---|---|---|
| முட்டி | தாதிகள் | கூளங்கள் |
| ஒழுகியது | கலவை | அணிய |
| மருத்துவ மனை | சுகாதாரம் | அடிக்கடி |

அரும்பொருள்

தவறாமல் - நின்றுவிடாமல். மருத்துவ மனை - ஆஸ்பத்திரி. மருத்துவர் - வைத்தியர். தாதிகள் - வைத்திய உதவி செய்யும் பெண்கள். கலவை - பல மருந்துகளை ஒன்றாகக் கலத்தல்.

## கேள்விகள்

1. குப்பனுக்கு என்ன நேர்ந்தது ?
2. அடிபட்ட குப்பனை எங்குத் தூக்கிச் சென்றனர் ?
3. மருத்துவ மனை என்பது யாது ?
4. சுகமாய் வாழ மருத்துவர் கூறியவை யாவை ?
5. நீ இப்பாடத்திலிருந்து அறிவது யாது ?

## பயிற்சி

I. 1. தவறுமல், வீட்டுக்கு, மாடு முட்டி, அடிபட்டு, இரத்தம், கேள்விப்பட்டு, சிரித்துக்கொண்டே, குப்பை கூளங்கள், பள்ளம், குட்டை, சுத்தமாய்—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறு.

2. மாலை, பையன், வருகையில், போனூர், சிரித்து, பள்ளம், மூடி—எதிர்ச்சொற்கள் கூறு.

II. 1. குப்பன் மாலையில் வீடு திரும்பினுன்.

2. மருத்துவர் மருத்துவமனையில் இருக்கிறுர்.

3. இரண்டு தாதிகள் இருக்கின்றுர்கள்.

4. கண்ணனும் கமலாவும் கதை படித்தார்கள்.

5. முருகனுடைய மகள் கந்தன் மகனுடன் பள்ளிக்குப் போனுள்.

இந்த வாக்கியங்களிலுள்ள ஆண்பால்—பெண்பால் பெயர் களைக் கீழ்வரும் கட்டத்தில் பிரித்து எழுது.

| ஆண்பால் பெயர் | பெண்பால் பெயர் |
|---|---|
| | |



## 16. குமணன்

1. குமணன் பழங்காலத்துத் தமிழ் அரசன்; 'இல்லை' என்று கேட்பவர்களுக்கு 'இல்லை' என்று சொல்லாமல் உதவி செய்த வள்ளல்.

2. குமணனுக்கு ஒரு தம்பி இருந்தான். அவன் பெயர் அமணன். அண்ணன் அளித்து வந்த கொடை அவனுக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. 'கேட்பவர்களுக்குக் கொடுத்தபடியே இருந்தால் செல்வம் கரைந்துவிடும்' என்று அமணன் அஞ்சினன்;

அதனால் தன் அண்ணனை குமணனைக் கொல்ல முயற்சி செய்தான்.

3. தம்பியின் எண்ணத்தை அறிந்த குமணன் அரசைத் தம்பிக்கே விட்டுவிட்டுக் காட்டிற்குப் போய் விட்டான். எனினும் தன் அண்ணன் என்றுவது வந்து அரசைக் கேட்டால் என்ன செய்வது என்று அமணன் எண்ணினான்; அண்ணன் தலையை வெட்டிக் கொண்டுவருபவருக்கு ஆயிரம் பொன் பரிசு தருவதாய்ப் பறை சாற்றினான்.

4. குமணன் காட்டில் தனித்து வாழ்ந்தான். அச்சமயம் வறுமையால் வாடிய ஒரு புலவர் அங்கு வந்தார். அவர் பெயர் பெருந்தலைச் சாத்தனார். அவர் குமணனிடம் தம் வறுமை நிலையை விளக்கிக் கூறினார்.

5. குமணன் புலவரின் வறுமையைக் கேட்டு வருந்தினான்; தான் அரசனாய் இருந்தபோது புலவர் வரவில்லையே என்று ஏங்கினான்; தான் கையில் காசு இல்லாமல் காட்டில் வசிப்பதை எண்ணினான். தன்னிடம் உதவி கேட்கும் புலவரை, ஒன்றுங் கொடாமல் அனுப்ப அவனுக்கு மனம் வரவில்லை.

6. தன் தலையைக் கொண்டுவந்தால் ஆயிரம் பொன் தரப்படும் என்று அமணன் பறை சாற்றியது குமணன் நினைவுக்கு வந்தது. குமணன் அதைப் புலவரிடம் கூறித் தன் தலையை வெட்டிக் கொண்டு போகும்படி வேண்டினான்; உடைவாளைப் புலவரிடம் அளித்தான்.

7. புலவர் குமணனின் வள்ளல் தன்மையைப் புகழ்ந்தார் ; உடைவாளுடன் அமணன் அரச சபைக்குச் சென்றார் ; அமணனுக்கு நல்லறிவு புகட்டினார் ; குமணன் தன் தலையையே கொடுக்கத் துணிந்ததை எடுத்துக் காட்டினார்.

8. அமணன் அறிவு பெற்றான் ; காட்டிற்குச் சென்று, அண்ணனிடம் மன்னிப்பு வேண்டினான் ; அண்ணனை அழைத்து வந்து மீண்டும் அரசன் ஆக்கினான். குமணன் புலவருக்குப் பெரும் பொருள் அளித்து, அவருடைய வறுமையைப் போக்கினான்.

| | | |
|---|---|---|
| பழங்காலம் | எண்ணினான் | ஏங்கினான் |
| வள்ளல் | பறை சாற்றினான் | உடைவாள் |
| ஆத்திரம் | வறுமை | மன்னிப்பு |
| செல்வம் | வாடிய | அளித்துவந்த |

### அரும்பொருள்

வள்ளல் - கேட்பவர்களுக்கு இல்லை என்னாமல் கொடுப்பவன். கரைந்து - குறைந்து. பறை சாற்றினான் - எல்லோருக்கும் தெரியுமாறு விளம்பரப்படுத்தினான்.

### கேள்விகள்

1. குமணன் என்பவன் யார் ?
2. அவன் ஏன் காட்டிற்குச் சென்றான் ?
3. தம் வறுமை நிலையைக் கூறிய புலவருக்குக் குமணன் என்ன கொடுத்தான் ?
4. அமணன் நல்ல அறிவு பெற்றது எப்படி ?
5. நீ இக்கதையிலிருந்து அறிவது யாது ?

## பயிற்சி

I. 1. பழங்காலம், வள்ளல், ஆத்திரம், செல்வம், கரைந்து, பரிசு, வறுமை, நல்லறிவு, மன்னிப்பு—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறு.

2. இக்கதையை அமணன் தானே கூறுவது போல எழுது.

3. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துச் சொல் :—

(1) குமணன் இல்லை என்று சொல்லாத ———.
(2) குமணன் ——— ——— அமணன்.
(3) குமணனிடம் உதவி கேட்ட புலவர் பெயர் ——— ———.
(4) அமணன் புலவரால் ——— பெற்றான்.

II. 1. இவற்றைப் படி :—

| ஒன்று | பல |
|---|---|
| பழம் | பழங்கள் |
| நீ | நீங்கள் |
| கண் | கண்கள் |
| கை | கைகள் |

ஒரே ஒரு பொருளைக் காட்டும் சொல் ஒருமை எனப்படும். ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைக் காட்டும் சொல் பன்மை எனப்படும்.

2. புலி, ஆடு, குதிரைகள், மாம்பழம், நான், பூனைகள், கால், ஓடைகள், ஏரி, மயில்கள், மான்—இவற்றில் உள்ள ஒருமை, பன்மைகளைக் கூறு.



## 17. தென்னைமரத் தொழில்

1. நீங்கள் தேங்காயை நன்கு அறிவீர்கள். தேங்காய் காய்க்கும் மரம் தென்னை மரம் எனப்படும். நீங்கள் இம்மரத்தைப் பார்த்திருக்கிறீர்களா?

2. தேங்காய்மீது உறுதியான ஓடு மூடியிருக்கும். அதை உடைத்தால் உள்ளே சிறிது தண்ணீரும், தேங்காய்ப் பருப்பும் இருக்கும். தேங்காய்ப் பருப்புத் தின்பதற்கு இனிப்பாயிருக்கும். அதை மென்றால் பால் வருகிறதல்லவா? தேங்காய்ப் பால் சத்து உடையது. நாம் அதைக் கறி வகைகளில் சேர்த்து உண்கிறோம்; தேங்காய்ப்பால் சோறு செய்து சாப்பிடுகிறோம்.

3. தேங்காய் முற்றுவதற்கு முன் இளநீர்க்காய் எனப்படும். இளநீர்க்காயில் தேங்காய்ப் பருப்பு முற்றி இராது. நீரே மிகுதியாய் இருக்கும். இதில் இருக்கும்

பருப்பு வழவழ என்று இருக்கும். ஆதலால் இதற்கு வழுக்கை என்பது பெயர்.

4. தேங்காய் நன்கு முற்றிய பிறகு, உள்ளிருக்கும் பருப்பு உடையாமல் ஓட்டை மட்டும் உடைத்துக் காய வைத்தால் நீர் சுண்டிக் கொப்பரை ஆகும். இது தின்பதற்கு மிகவும் இனிப்பாயிருக்கும். மக்கள் இதனைச் சிறு துண்டுகளாய்ச் செதுக்கிப் பாக்கில் கலக்கிறார்கள்; சிற்றுண்டிகளில் சேர்க்கிறார்கள். இதற்குக் கொப்பரைச் சீவல் என்பது பெயர். கொப்பரையை அப்படியே செக்கில் இட்டு ஆட்டி எண்ணெய் எடுக்கலாம். தேங்காய் எண்ணெய் நெய் போலக் கட்டியாகவும் ஆக்கப்படுகிறது. இதை உணவுக்கும் பயன்படுத்தலாம்.

5. தென்னம்பாளையைச் சீவினால் ஒரு வகை இனிப்பு மிகுந்த சாறு வடியும். அதிலிருந்து வெல்லம் செய்யலாம். தேங்காய் ஓடுகள், கொட்டாங்கச்சிகள் எனப்படும். கொட்டாங்கச்சி அகப்பை செய்ய உதவுகிறது; மற்றும் சில அழகிய பொருள்கள் செய்யப் பயன்படுகிறது.

6. தேங்காய் ஓட்டுக்கு மேலே உள்ள மட்டை கயிறு திரிக்க உதவுகிறது. மட்டையை ஊறவைத்து அடித்து நார் ஆக்கி, நாரைத் திரித்துக் கயிறு செய்கிறார்கள். கயிறு பின்ன உதவாத குட்டையான நார்களைக் கொண்டு மிதியடிகள் செய்கிறார்கள்.

7. தென்னை ஓலை குடிசைகளுக்குக் கூரை போட உதவுகிறது. தென்னை ஈர்க்குகள் துடைப்ப

மாய் உதவுகின்றன. தென்னையின் அடிமரம் கூரை வீடுகளின் விட்டம், தூண் முதலியவையாய்ப் பயன்படுகின்றது.

8. தென்னைமரம் மக்களுக்குப் பல வகையில் பயன்படுகின்றது. தென்னை, மணற்பாங்கான நிலத்தில் நன்றாய் விளையும். மலையாளத்தில் தென்னைமரத் தொழில் சிறப்பாய் நடைபெறுகிறது.

| | | | |
|---|---|---|---|
| உறுதி | சத்து | உண்கிறோம் | சுண்டி |
| கொப்பரை | இளநீர் | வழுக்கை | முற்றி |
| கொட்டாங்கச்சி | மட்டை | சீவல் | மிதியடி |
| ஈர்க்கு | விட்டம் | மணற்பாங்கு | மலையாளம் |

## அரும்பொருள்

உறுதியான - கடினமான. உண்கிறோம் - சாப்பிடுகிறோம். சுண்டி - வற்றி. சீவல் - சிறுதுண்டுகள். சிற்றுண்டி - பலகாரம். மிதியடி - காலைத்துடைக்கப் பயன்படும் தென்னை நார்ப்பாய்.

## கேள்விகள்

1. தேங்காய் உங்களுக்குத் தெரியுமா ?
2. நாம் அதை எப்படி எப்படிப் பயன்படுத்துகிறோம் ?
3. இளநீர் என்பது யாது ?
4. வழுக்கை, கொப்பரை என்பவை யாவை ?
5. தேங்காய் எண்ணெய் எப்படிக் கிடைக்கிறது ?
6. கயிறு பின்னத் தென்னை எப்படி உதவுகிறது ?

## பயிற்சி

இவற்றைப் படி :—

அடுப்பு எரிக்கக் கரி வாங்கினோம்.
உணவோடு உண்ணக் கறி சமைத்தார்கள்.

கரி, கறி என்னும் இரண்டு சொற்களின் பொருள் வேறுபாட்டைக் கவனி.



## 18. பள்ளி நூல் நிலையம்

1. எங்கள் பள்ளிக்கூடத்தில் நூல் நிலையம் ஒன்று இருக்கிறது. அதில் பல நூல்கள் இருக்கின்றன. நாங்கள் அவற்றை வாங்கிப் படிக்கிறோம்.

2. நூல் நிலையத்தில் இரண்டு அலமாரிகள் நிறைய நூல்கள் அடுக்கு அடுக்காய் இருக்கின்றன. இந்த நூல் நிலையப் பொறுப்பு ஓர் ஆசிரியரிடம் இருக்கிறது. அவர் நூல்களை எல்லாம் ஒழுங்காய் அடுக்கி வைத்திருக்கிறார்; மாணவர்கள் விரும்பும் நூலை எடுத்துக் கொடுக்கிறார்.

3. வாரத்திற்கு ஒரு முறை ஒவ்வொரு மாணவரும் நூல் நிலையத்தில் நூல் வாங்கலாம். அதைப் படித்துக் குறிப்பு எடுத்துக்கொண்டபின், அதைக் கொடுத்துவிட்டு வேறு நூல் வாங்கிப் படிக்கலாம்.

4. நூல் நிலையத்தால் நாங்கள் மிகவும் பயன் அடைகிறோம். நூல் நிலையம் என்ற பெயரினால், புத்தகத்துக்கு நூல் என்றும் ஒரு பெயர் உண்டு என அறிந்தோம். நூலைச் சுவடி என்றும் கூறலாம் என எங்கள் ஆசிரியர் கற்பித்தார்.

5. நாங்கள் நூல் நிலையத்தில் வாரந்தோறும் நூல்களை வாங்கிப் படித்ததால் பல கதைகளை அறிந்தோம்; படங்களைப் பார்த்ததால் உலகப் புதுமைகளை அறிந்தோம்; பாடல்கள் சில பாடுவதற்குத் தெரிந்து கொண்டோம். நாங்கள் பள்ளிக்கூடப் பாடங்களுடன் விடுமுறை நாட்களில் நூல் நிலையச் சுவடிகளைப் படித்துப் பயன் அடைகிறோம்.

| | | |
|---|---|---|
| நிலையம் | பொறுப்பு | புதுமைகள் |
| அலமாரி | சுவடி | விடுமுறை |
| நிறைய | வாரம்தோறும் | பயன் |

### அரும்பொருள்

சுவடி, நூல், புத்தகம் - ஒரே பொருள் தரும் சொற்கள்.
உலகப் புதுமைகள் - உலகத்தின் அதிசயங்கள்.

### கேள்விகள்

1. நூல் நிலையம் என்பது என்ன ?
2. நூல்களை அடுக்கிவைக்க உதவுவது எது ?
3. நூல் நிலையம் எப்படி நடக்கிறது ?
4. உன் நூல் நிலையத்தில் என்னென்ன நூல்கள் இருக்கின்றன ?
5. நீ நூல் நிலையத்தினால் அடையும் பயன் என்ன ?

## பயிற்சி

I. 1. நூல்கள், அலமாரி, அடுக்காய், பொறுப்பு, குறிப்பு, கதை, பாட்டு, பயன், சுவடி, விடுமுறை—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்.

2. அடுக்கு அடுக்காக, விதம் விதமாக—இவை அடுக்குச் சொற்கள். இவைபோல ஐந்து அடுக்குச் சொற்களைக் கூறு.

3. உங்கள் பள்ளிக்கூட நூல் நிலையம் பற்றிப் பத்து வரிகள் எழுது.

4. இவற்றைப் பொருத்தமாகச் சேர்த்துச் சொல் :—

| | |
|---|---|
| (1) புளிப்பாக இருக்கும் பழம் | முந்திரி |
| (2) இனிப்பு நிறைந்த பழம் | எலுமிச்சை |
| (3) துவர்ப்பு கலந்த பழம் | கிச்சிலி |
| (4) புளிப்பு கலந்த பழம் | நெல்லி |
| (5) கொட்டை வெளியில் நீண்ட பழம் | பலா |

II. இவற்றைக் கவனி :—

| | | |
|---|---|---|
| நிலம் | நிழல் | நீளம் |
| பலம் | பழம் | குளம் |

இவற்றை எப்படி உச்சரிப்பது என்பதைக் கவனி. இவற்றை மாற்றி உச்சரிப்பது தவறு. அதாவது, நிழம், பளம், நிளல், குழம், நீழம் என்று உச்சரிப்பது பிழை.

III. ஒருமை பன்மைப் பெயர்களை எழுது :—

| பன்மை | ஒருமை |
|---|---|
| அரசர்கள் | ______ |
| ______ | பையன் |
| நீங்கள் | ______ |
| நாங்கள் | ______ |
| ______ | புத்தகம் |





## 19. கிராம ஆட்சி

1. நம் நாட்டில் நகரங்களைவிடக் கிராமங்களே மிகுதியாய் இருக்கின்றன. கிராம ஆட்சி நடத்தும் பெரிய அதிகாரிக்கு **மணியக்காரர்** அல்லது **முனிசீப்** என்பது பெயர். இவருக்கு உதவியாகக் கணக்கப் பிள்ளை, வெட்டியான், தலையாரி என்பவர்கள் இருக் கின்றனர்.

2. கிராம மணியக்காரர் நிலங்களுக்குரிய வரியை வாங்குவார். வரி வாங்குவதில் தலையாரி மணியக்காரருக்கு உதவியாய் இருப்பான். மணியக் காரர் தாம் வாங்கிய வரிப்பணத்தை அரசாங்க நிதிக்கு அனுப்பி வைப்பார்.

3. கணக்கப்பிள்ளை, ஒவ்வொரு நிலச் சொந்தக் காரருக்கும் உள்ள விளை நிலங்களை அளந்து கணக்கு

எடுப்பார்; அவர்கள் எவ்வளவு வரிப்பணம் தரவேண்டும் என்பதைக் கணக்கு எழுதி மணியக்காரரிடம் கொடுப்பார்.

4. பிறப்பு இறப்புகளைக் குறிப்பதும் மணியக்காரர் வேலைதான். ஊரில் நடக்கும் சிறு கலகங்களையும் சண்டைகளையும் தீர்த்து வைப்பதும் அவர் வேலையே. சிறு குற்றங்களையும் வழக்குகளையும் விசாரணை செய்து தீர்ப்பு அளிப்பதும் அவர் கடமை ஆகும்.

5. தலையாரி கிராமத்தைக் காவல் புரிவான். வெட்டியான் நிலம் அளக்க உதவுவான்; மணியக்காரரும் கணக்கப்பிள்ளையும் ஏவும் வேலைகளைச் செய்வான். அரசாங்கம் இவர்களை நியமிக்கிறது. ஆதலால் இவர்களுக்கு அரசாங்கம் மாதந்தோறும் சம்பளம் தருகிறது. சிறிய கிராமங்களில் மணியக்காரரே அதிகாரி.

6. பெரிய கிராமங்களில், தெருக்களைச் சுத்தமாய் வைத்துக்கொள்வது, இரவில் விளக்குகள் போடுவது, கிராம சுகாதாரத்தைக் கவனித்துக் கொள்வது, கல்வி பரவ வேலை செய்வது ஆகிய வேலைகளைப் **பஞ்சாயத்துச் சபை** செய்துவருகிறது.

7. கிராம மக்கள் வாக்கு (ஓட்டு)க் கொடுப்பதன் மூலம் உறுப்பினரைத் தேர்ந்தெடுத்துப் பஞ்சாயத்துச் சபைக்கு அனுப்பிவைப்பார்கள். பஞ்சாயத்துச் சபை உறுப்பினர்களுக்குச் சம்பளம் இல்லை. மணியக்காரர், கணக்கப்பிள்ளை, தலையாரி, பஞ்சாயத்

துச் சபையினர் முதலியவர்களால் கிராம ஆட்சி நடைபெறுகிறது; கிராமச் சுகாதாரம், கல்வி முதலியவை வளர்ச்சி பெறுகின்றன.

| | | |
|---|---|---|
| நகரங்கள் | அளந்து | விசாரணை |
| அதிகாரி | பிறப்பு | நியமிக்கிறது |
| மணியக்காரர் | இறப்பு | பஞ்சாயத்து |
| முனிசீப் | குறிப்பது | வாக்கு |
| தலையாரி | தீர்த்து | உறுப்பினர் |
| வரி | குற்றங்கள் | ஏவும் |
| நிதி | வழக்குகள் | விளை நிலம் |

## அரும்பொருள்

நிதி - பொக்கிஷம். குறிப்பது - எழுதிவைப்பது. ஏவும் - இடும். உறுப்பினர் - அங்கத்தினர். நியமிக்கிறது - வேலைக்கு வைக்கிறது.

## கேள்விகள்

1. கிராமத்தில் பெரிய அதிகாரி யாவர்?
2. கணக்கப் பிள்ளையின் வேலை என்ன?
3. நிலக் கணக்கு எப்படி எடுக்கப்படுகிறது?
4. மணியக்காரரின் வேலை என்ன?
5. தலையாரி என்பவன் யார்?
6. பஞ்சாயத்துச் சபை என்பது என்ன?
7. அதன் பொறுப்புகள் யாவை?

## பயிற்சி

1. நகரம், கிராமம், மிகுதி, அதிகாரி, கணக்கப்பிள்ளை, உதவியாய், அளந்து, நிலங்களை, கலகம், சண்டை, காவல் - இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

2. பெரிய, மிகுதி, பிறப்பு, சிறு, இல்லை, இறப்பு, கிராமம்— இவற்றுக்கு எதிர்ப்பதங்கள் கூறு.



## 20. காகிதம் கூறிய கதை

1. என் பெயர் **காகிதம்**. என்னை அறியாதவர்கள் உலகத்தில் ஒருவரும் இல்லை. நான் குப்பையிலும் கிடப்பேன்; கோபுரத்திலும் இருப்பேன்; செல்வர்களும் என்னை விரும்புவார்கள்; ஏழைகளும் என்னைத் தேடுவார்கள். பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும் நான் மிக வேண்டியவன்.

2. உலகில் நான் இல்லாமல் எதுவும் நடைபெறாது; அரசாங்கம் நடப்பது என்னாலே; நீதி மன்றங்கள் நடப்பதும் என்னாலே; கல்வி வளர்வது என்னாலே; கலைகள் பெருகுவதும் என்னாலே; வாணிகம் நடப்பது என்னாலே; வரலாறுகள் வெளிப்படுவது என்னாலே. நான் இல்லாமல் பண நடமாட்டம் ஏது?

3. நான் பிள்ளைகளுக்குக் காற்றாடியாய் இருந்து மகிழ்ச்சி அளிப்பேன்; பெரியவர்களுக்குச் செய்தி அறிவுக்கும் தூதனாக இருப்பேன். உலகச் செய்திகளை எல்லாம் அறிவிப்பது நானே. கடைக்காரர்களுக்குச் சாமான்கள் மடித்துத் தரப் பயன்படுவதும் நானே. என்னைப்போல, இப்படிப் பல வேலைகளையும் செய்பவர் வேறு எவரேனும் உண்டோ?

4. என் பிறப்பை நீங்கள் அறிவீர்களா? நான் காட்டில் விளையும் கோரைப்புல், வைக்கோல், மூங்கில், மரப்பட்டை, ஒருவகை மரம் முதலியவற்றிலிருந்து பிறக்கிறேன். இவைகளைத் தூளாக்கி, அறைத்து, ஊறவைத்து, வேகவைத்துக் கூழ்போலச் செய்த பிறகு, அம்மரக் கூழிலிருந்து நான் பிறக்கிறேன்.

5. முற்காலத்தில் மரக்கூழை மெல்லிய துணிகளில் சமமாகப் பரப்பிக் கையாலே என்னைச் செய்தார்கள். இக்காலத்தில் பெரிய இயந்திரங்கள் மூலம் நான் பெருகி வருகிறேன். உழைப்பிற்கு ஏற்றபடி நான் அழகாயும் வெண்மையாயும் வழவழப்பாயும் இருப்பேன்; பல நிறங்களோடு இருப்பேன்.

6. இவ்வாறு நான் எல்லா மக்களுக்கும் எல்லா வேலைகளுக்கும், ஏற்றத்தாழ்வு எண்ணமல் தொண்டு செய்கிறேன். என்னை விரும்பி ஏற்காதவர் எவரும் இல்லை. இதிலிருந்து நான் சுயநலம் கருதாத பொது நலத் தொண்டன் என்பது விளங்குகிறது அல்லவா? என்மூலம் அறிவை வளர்த்துக்கொள்ளும் நீங்கள் ஒரு நாளாவது எனக்கு நன்றி செலுத்தினீர்களா?

| | | |
|---|---|---|
| காகிதம் | வாணிகம் | மரப்பட்டை |
| குப்பை | வரலாறுகள் | தூளாக்கி |
| கோபுரம் | பணநடமாட்டம் | அரைத்து |
| வேண்டியவன் | தூதன் | மரக்கூழ் |
| நடைபெறுது | சாமான்கள் | இயந்திரங்கள் |
| நடப்பது | கோரைப்புல் | ஏற்றத்தாழ்வு |
| கலைகள் | வைக்கோல் | தொண்டு |
| கருதாத | மூங்கில் | சுயநலம் |

## அரும்பொருள்

வாணிகம் - வியாபாரம். வரலாறு - சரித்திரம். தொண்டு - வேலை. சுயநலம் - தன் நன்மையைமட்டும் கவனித்தல்.

## கேள்விகள்

1. காகிதம் யார் யாருக்குப் பயன்படுகிறது ?
2. அதனால் நடைபெறுவது என்னென்ன ?
3. காகிதம் செய்யும் பல வேலைகள் யாவை ?
4. காகிதம் செய்யப் பயன்படும் பொருள்கள் யாவை ?
5. காகிதம் பொதுநலத் தொண்டன்—எப்படி ?

## பயிற்சி

1. காகிதம், குப்பை, கோபுரம், செல்வர், ஏழை, வரலாறு, பணநடமாட்டம், தூதன், உலகச்செய்திகள், கடைக்காரர், பெரிய பெரிய, பொதுநலத் தொண்டு—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்.

2. அறியாதவர், இல்லை, செல்வர், விரும்புவார், பெரியவர்கள், காட்டில், முற்காலம், ஏற்றம்—இவற்றிற்கு எதிர்ச் சொற்கள் கூறு.

3. எண் பெயற் காகிதம் எண்ணை அரியாதவர்கள் உளகத்தில் ஒறுவறும் இள்ளை.—இவற்றைத் திருத்திப் படி.



## 21. நெசவுத் தொழில்

1. எங்கள் ஊரில் நெசவுத் தொழில் சிறப்பாய் நடைபெறுகிறது. நெசவுத் தொழில் செய்பவர் நெசவாளர் ஆவார். நாம் உடுத்திக்கொள்ளத் துணிகள் கிடைப்பதற்கு நெசவுத் தொழிலே காரணம் ஆகும். புடைவை, வேட்டி, மேல்துண்டு, சட்டைத்துணி முதலியவைகளை நெசவாளர் நெய்து தருகின்றனர். நெசவுத் தொழில் நம் நாட்டின் உயிர்போன்ற தொழிலாகும்.

2. தக்ளி, இராட்டினம், பரிவட்டம், தார், குழல், தறி முதலியவை நெசவுத் தொழில் நடைபெறத் தேவையான கருவிகள் ஆகும். நெசவுத் தொழிலுக்கு தேவையான கருவிகள் எல்லாம் இருந்தாலும், நூல் இருந்தால்தானே துணி ஆகும். எனவே நூல் எல்லாவற்றையும்விட முக்கியமானது.

3. கொட்டை நீக்கிப் பதம் செய்த பஞ்சிலிருந்து நூல் நூற்கப்படுகிறது. இராட்டினம், தக்ளி

முதலியவை மூலம் பஞ்சிலிருந்து நூல் நூற்கலாம். ஆலைகள் மூலம் நிறைய நூல் கிடைக்கிறது.

4. நெசவாளர் நூலைக் கொண்டுவந்து தேவைப் படும் சாயங்களை ஏற்றியபின், பாவு ஆக்குவார்கள். எந்த மாதிரித் துணி வேண்டுமோ, அந்த மாதிரியே நூலில் அமைத்துக்கொள்வது 'பாவு' எனப்படும். நெசவாளர் பாவில் கஞ்சி ஏற்றி, எந்த விதமான சிக்கும் இல்லாமல் ஒழுங்காய்ச் சீர் செய்த பிறகு, பாவைத் தறியில் பூட்டி நெய்வார்கள்.

5. நெசவாளர் நம் நாட்டில் இலட்சக்கணக்கில் இருக்கிறார்கள். ஆலைகள் நம் நாட்டில் பலவகையான துணிகளை நெய்கின்றன.

6. நெசவுத் தொழில் மிகச் சிறந்த தொழிலாகும். அதைச் செய்யும் நெசவாளரே நாம் உடுக்க உடைகளைக் கொடுத்து உதவும் உத்தமர் ஆவர். இவர்களை நாம் வாழ்த்த வேண்டும்.

| | | |
|---|---|---|
| உடுத்திக்கொள்ள | உற்பத்தி | கருவிகள் |
| இராட்டினம் | பரிவட்டம் | தார் |
| குழல் | தறி | தக்ளி |
| பாவு | சிக்கும் | பூட்டி |
| இலட்சக் கணக்கில் | உடைகள் | நெசவாளர் |

அரும்பொருள்

நெசவு - துணி நெய்யும் தொழில். பரிவட்டம் - சிப்பத்திலிருந்து நூலைப் பிரித்தெடுக்கப் பயன்படும் கருவி. தார் - தறியில் குறுக்கிழை ஓட்ட நூல் சுற்றப்பட்டுள்ள கருவி. தறி - துணி நெய்யப் பயன்படும் கருவி. ஆலைகள் - துணி நெய்யும் இயந்திரங்கள்.

## கேள்விகள்

1. நெசவுத் தொழில் எப்படிச் சிறந்தது ?
2. துணி நெய்யத் தேவைப்படும் கருவிகள் யாவை ?
3. நூல் எப்படிக் கிடைக்கிறது ?
4. ‘பாவு’ என்பது என்ன ?
5. நெசவாளர்களின் சிறப்பு என்ன ?

## பயிற்சி

I. 1. சிறப்பாக, நெசவு, உடுத்த, புடைவை, சட்டை, தக்ளி, நூல், சாயம், துணி, உடை, உத்தமர்—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்.

2. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை நிரப்பு :

1. நெசவு செய்பவர் —— ஆவார்.
2. நெசவு நம் நாட்டின் —— போன்ற தொழில்.
3. —— மூலம் நிறைய நூல் கிடைக்கிறது.
4. நெசவாளர் நல்ல துணிகளை ——.
5. நெசவுத் —— மிகச் —— ——.

3. மேல்துண்டு, வேட்டி, சட்டை—இவை ஆண்கள் அணியும் உடை. பெண்கள் உடுத்தும் உடைகளில் சிலவற்றைக் கூறு.

II. பின்வரும் சொற்களைக் கீழே உள்ள கட்டத்தில் பொருத்திக் காட்டு :—

குளங்கள், மலர், ஏரிகள், ஓடினார்கள், சிலர், கண், மண், சிரித்தார்கள், பேசினார்கள், கண்ணன், கண்ணகி, கழுதை, மரம்.

| பெயர்ச் சொல் | வினைச் சொல் | ஆண் பால் | பெண் பால் | ஒருமை | பன்மை |
|---|---|---|---|---|---|
| | | | | | |



## 22. பள்ளிக்கூட விளையாட்டுகள்

1. 'நாங்கள் நாள்தோறும் மாலையில் விளையாடுகிறோம். எங்கள் விளையாட்டு ஆசிரியர் பல விளையாட்டுக்களைக் கற்பிக்கிறார்.

2. நாங்கள் காலையில் பள்ளிக்குச் சென்றவுடன் கொடி வணக்கம் செய்கிறோம்; பிறகு கடவுள் வணக்கம் செய்கிறோம்; பிறகு படிக்கிறோம்; மாலையில் படிப்புமுடிந்ததும் ஒரு மணி நேரம் விளையாடுகிறோம்.

3. எங்கள் பள்ளிக்கூடவெளியிடத்தில் நாங்கள் கால் பந்து ஆடுவோம்; கை பந்து ஆடுவோம்; ஓடி ஆடுவோம்; தாண்டுவோம்; துள்ளிக் குதிப்போம்; சறுக்குமர ஆட்டம் ஆடுவோம்; ஏற்ற விளையாட்டு ஆடுவோம்; பெரிய பிள்ளைகள் 'தண்டால்' எடுப்பார்கள்; சிலர் 'பார்' விளையாடுவார்கள்.

4. நாங்கள் ஓடியாடி விளையாடும்போது உடம்பில் வியர்வை உண்டாகிறது. இதனால் "இரத்தத்திலிருக்கும் மாசுகள் வியர்வையாய் வெளியாகின்றன; இரத்தம் சுத்தம் ஆகிறது; இரத்த ஓட்டம் அதிகமாகிறது; உடல் உரம் பெறுகிறது; மனம் உற்சாகம் அடைகிறது," என்று எங்கள் ஆசிரியர் கூறினர்.

5. எங்கள் பள்ளிக்கூடத்தில் படிக்கும் பெண்களும் விளையாடுகிறார்கள். அவர்கள் ஊஞ்சல் ஆடுகிறார்கள்; கை கால்களை நீட்டிமடக்கும் பயிற்சி செய்கிறார்கள். கயிற்றைச் சுற்றிக்கொண்டு அதற்குள் புகுந்து துள்ளிக் குதிக்கின்றார்கள்; கைப்பந்து ஆடுகின்றார்கள்; கோலாட்டம் அடிக்கின்றார்கள்; கும்மி அடித்துப் பாடுகின்றார்கள்; கைகளைக் கோத்து வளையம்போலச் சுற்றி ஆடுகின்றார்கள் 'தும்பு-தூட்டி' ஆடுகின்றார்கள்.

6. விளையாட்டுகள் மூலம் எங்கள் உடல் வலிவு பெறுவதுமட்டும் அன்று; ஆண்டு முடிவில் பந்தய விளையாட்டுகள் நடைபெறும். நாங்கள் பல விளையாட்டுகளில் பங்கு கொள்வோம்; வெற்றி அடைவோம்; பரிசுகள் பெறுவோம்.

| | | |
|---|---|---|
| கொடி வணக்கம் | தாண்டுவோம் | மாசு |
| இறை வணக்கம் | குதிப்போம் | உரம் |
| வெளியிடம் | தண்டால் | கோலாட்டம் |
| சறுக்குமர ஆட்டம் | வியர்வை | கும்மி |
| ஊஞ்சல் | துள்ளி | தும்பி—தூட்டி |

## அரும்பொருள்

தண்டால் – தரையில் படுத்துச் செய்யும் உடற் பயிற்சி. மாசு - அழுக்கு. உரம் – வலிமை.

## கேள்விகள்

1. நீ எப்போது விளையாடுகிறாய் ?
2. நீ காலையில் பள்ளிக்கூடத்தில் என்ன செய்கிறாய் ?
3. நீ என்னென்ன ஆட்டம் ஆடுகிறாய் ?
4. விளையாடுவதால் ஏற்படும் நன்மை என்ன ?
5. பெண்களின் விளையாட்டுகள் எவை ?

## பயிற்சி

I. 1. விளையாட்டு, வணக்கம், பந்து, துள்ளி, வியர்வை, மாசு, இரத்தம், சுத்தம், கோலாட்டம், பந்தயம், பரிசு, வெற்றி—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறு.

2. விசிறி, ஏணி, ஊசி, தீக்குச்சி, மண்வெட்டி, கோடரி, வேலங் குச்சி, பந்து—இவற்றுள் ஒவ்வொன்றும் எதற்குப் பயன் படும் ?

II. இவற்றைக் கவனி :—

| | | |
|---|---|---|
| பணம் | மனம் | நல்ல |
| குணம் | சினம் | நாங்கள் |

இவற்றைக் கவனத்துடன் உச்சரித்துப் பழகு.

# 23. நரியும் ஆட்டுக் குட்டியும்

(படப் பயிற்சி)



## பயிற்சி

I. படத்தைப் பார்த்துக் கதையை எழுது.

II. கீழ்வரும் கேள்விகளுக்கு விடை கூறு :—

1. நரிக்கு என்ன துன்பம் உண்டானது ?

2. அத்துன்பத்திலிருந்து தப்பிப் போக அது என்ன செய்தது ?

3. நரி ஆட்டைப் பார்த்து என்ன சொல்லியிருக்கும் ? (நீயே யோசித்துச் சொல்)

4. ஆடு கிணற்றுக்குள் போகக் காரணம் என்ன ?

5. நரி எவ்வாறு தப்பினது ?

6. நீ இக்கதையிலிருந்து என்ன தெரிந்து கொள்ளுகிறாய் ?

III. 1. இக்கதையை நரி சொல்வதுபோலச் சொல்.

2. இக்கதையை ஆடு சொல்வது போலச் சொல்.

3. இதே கதையைக் கிணறு கூறுவதுபோலக் கூறு.

IV. 1. கீழ் வரும் ஆண்பாலுக்குத் தகுந்த பெண்பால் கூறு :—

மாமன், அண்ணன், தந்தை, அரசன், தயிர்க்காரன், வண்ணான்.

2. கீழ் வரும் ஒருமைச் சொற்களுக்குப் பன்மைச் சொற்களைக் கூறு :—

நான், நீ, அவன், பறவை, குழந்தை, மலர், தோட்டம்.

3. கீழ் வரும் வாக்கியங்களில் உள்ள எழுவாய், பயனிலை-செயப்படுபொருள்களை எடுத்து எழுது :—

ஆசிரியர் பாட்டுப் பாடினர்.
குழந்தை பால் குடிக்கின்றது.
மாடு புல் தின்னும்.
நான் பாடம் எழுதுகிறேன்.



## 24. கைத்தொழில்

1. கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள் ;
கவலை உனக்கில்லை ஒத்துக்கொள் ;
எத்தொழில் எதுவும் தெரியாமல்
இருப்பது உனக்கே சரியாமோ ?

2. உழவும் தொழிலும் இல்லாமல்
உலகில் ஒன்றும் செல்லாது ;
விழவும் கலையும் விருந்துகளும்
வேறுள இன்பமும் இருந்திடுமோ ?

3. நெசவுக் காரர்கள் நெய்யாமல்
நிலத்தவர் உடைக்கென் செய்வார்கள் ?
குசவன் செய்திடும் பாண்டமன்றே
குடித்தனம் நடந்திட வேண்டுமென்றும்.

4. கொல்லரும் தச்சரும் கூடாமல்
கூடமும் மாடமும் வீடாமோ ?
கல்லடி சிற்பியும் தச்சருமே
காரியம் பலவினுக் கச்சாணி.

5. வேந்தர்கள் வரிப்பணம் வாங்குவதும்
வீரர்கள் வெற்றிகள் தாங்குவதும்
மாந்தர்கள் செய்யும் எத்தொழிலும்
மண்ணிற் சிறப்பது கைத்தொழிலால்

—நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை

| | | |
|---|---|---|
| விழவு | மாடம் | வேந்தர் |
| கலை | கல்லடி | மாந்தர்கள் |
| குடித்தனம் | சிற்பி | சிறப்பது |
| கூடம் | அச்சாணி | கைத்தொழில் |

### அரும்பொருள்

உழவு - பயிர்த்தொழில். தொழில் - கைத்தொழில். விழவு - திருவிழாக்கள். கலையும் - பாட்டு, நடனம், நாடகம், படக்காட்சி முதலியவையும். பாண்டம் - சட்டி, பானை முதலியவை. கொல்லன் - இரும்பு வேலை செய்பவன். கல்லடி - கல்லை அடித்துச் செதுக்கு.

சிற்பி - கல்லில் உருவம் செதுக்குவோர். அச்சாணி - வண்டி அச்சாணி. மண்ணில் - உலகத்தில். சிறப்பது - பெருமை அடைவது.

## கேள்விகள்

1. கவலை இல்லாமலிருக்க என்ன செய்தல் வேண்டும்?
2. 'உலகில் ஒன்றும் செல்லாது'—எவை இல்லாமல்?
3. உடை செய்பவர் யார்? பாண்டம் செய்பவர் யார்?
4. கூடமும் மாடமும் வீடும் அமைக்க யார் யார் உதவி தேவை?
5. வேந்தர்கள் வரி வாங்குவதும் வீரர்கள் வெற்றி தாங்குவதும் எதனால் என்று புலவர் கூறுகிறார்?

## பயிற்சி

I. 1. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துக் கூறு:—

1. கைத்தொழில் ஒன்றைக் ——.
2. எதுவும் தெரியாமல் இருப்பது —— சரியாமோ?
3. மண்ணிற் —— கைத்தொழிலால்.

2. நெய்தல், கைத்தொழில், விருந்து, கலை, குடித்தனம், தச்சன், சிற்பி—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துச்சொல்.

II. திருத்திக் கூறு:

னல்ல, ணீங்கள், ளும், மநிதன், குனம், கநவு, பாறை, யாணை, பூறை, மாந், கிந்நம், கன்மனி.



## 25. நீதி தவறியதால் உயிர் இழந்த மன்னன்

1. **நெடுஞ்செழியன்** என்பவன் பாண்டிய மன்னன். இவன் பழைய காலத்தில் மதுரையைத் தலைநகராய்க்கொண்டு ஆண்டான். இவன் சிறந்த வீரன் ; நீதி தவருதவன்.

2. நெடுஞ்செழியன் தமிழில் மிகுந்த பற்றுக் கொண்டவன். அவன் அவையில் சாத்தனுர், நக்கீரர், பரணர், கபிலர் முதலிய சிறந்த புலவர்கள் இருந்தார்கள். மதுரையில் தமிழை வளர்க்க ஒரு சங்கம் இருந்தது. அதன் பெயர் **தமிழ்ச் சங்கம்** என்பது. நக்கீரர் என்னும் பெரும் புலவர் அதன் தலைவராய் இருந்தார். நெடுஞ்செழியன் புலவர்களுடன் உட்கார்ந்து தமிழ் ஆராய்ந்தான். மதுரைத் தமிழ்ச்

சங்கம் பல அருமையான நூல்கள் வெளிவர உதவியாய் இருந்தது.

3. நெடுஞ்செழியன் மனைவியின் கால் சிலம்பு ஒன்று களவு போயிருந்தது. ஒரு நாள் அரண்மனைத் தட்டான் அரசனிடம் வந்து, "அரசியின் கால் சிலம்பைக் களவாடிய கள்வனைக் கண்டு பிடித்தேன்," என்று கூறினன். நெடுஞ்செழியன் சிறிதும் சிந்திக்காமல், "அவனைக் கொன்று அச்சிலம்பை எடுத்து வருக," என்று கட்டளை இட்டான்.

4. மன்னன் கட்டளைப்படி ஒருவன் கொல்லப்பட்டான். அவன் பெயர் கோவலன் என்பது. அவன் அரசியின் காற்சிலம்பைத் திருடவில்லை. அவன் தன் மனைவி கண்ணகியின் காற்சிலம்பை விற்க மதுரைக்கு வந்தான். அரசியின் காற்சிலம்பைத் திருடியவன் அரண்மனைத் தட்டானே. அவன், தான் தப்பிக் கொள்ளக் கோவலன்மீது பழி சுமத்தினன். கோவலன் அநியாயமாகக் கொல்லப்பட்டான்.

5. கோவலன் மனைவி தன் கணவன் கொல்லப்பட்டதை அறிந்தாள்; மிகுந்த சினத்துடன் பாண்டியன் அவைக்கு வந்தாள். அவள் தன் மற்றொரு சிலம்பை அரசன் எதிரில் உடைத்து, அதற்குள் மாணிக்கக் கற்கள் இருப்பதைக் காட்டினள். களவு போன அரசியின் சிலம்பிற்குள் முத்துக்கள் இருப்பது மன்னனுக்குத் தெரியும். அதனல் நெடுஞ்செழியன் தான் செய்தது தவறு என்பதை உணர்ந்தான்.

மன்னன் நீதி தவறிய பின் உயிர் வாழ விரும்ப வில்லை; மனம் நொந்து உடனே கீழே விழுந்து இறந் தான். அரச மாதேவியும் உடனே உயிர் விட்டாள். நமது தமிழ் நாடு இத்தகைய நீதி தவறா மன்னர் பலரைப் பெற்றிருந்தது.

| | | |
|---|---|---|
| தலைநகர் | களவு | சிந்திக்காமல் |
| ஆண்டான் | சிலம்பு | கட்டளை |
| பற்று | அரண்மனை | அநியாயமாக |

### அரும்பொருள்

வென்றான் - வெற்றி அடைந்தான். பற்று - ஆசை. அவை - சபை. களவு - திருடு. சிந்திக்காமல் - யோசிக்காமல். சிலம்பு - காலில் அணியும் நகை. சினத்துடன் - கோபத்துடன்.

### கேள்விகள்

1. நெடுஞ்செழியன் என்பவன் யாவன்?
2. அவன் அவையில் இருந்த புலவர்கள் யாவர்?
3. அவர்கள் தமிழை வளர்க்க என்ன செய்தார்கள்?
4. அவன் நீதி தவறும்படி நடந்த நிகழ்ச்சி என்ன?
5. அவன் நீதி தவறா மன்னன் என்பது எப்படித் தெரிகிறது?

### பயிற்சி

1. பழைய காலத்தில், சிறந்த தொல்லை, பற்று, அருமை யான, உதவியாய், சிந்திக்காமல், பழி, அநியாயமாக—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறு.

2. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துப்படி :—
   (1) நெடுஞ்செழியன் என்பவன் ——— மன்னன்.
   (2) இவன் சிறந்த ———.

(3) மதுரையில் ——— ——— இருந்தது.
(4) ——— அநியாயமாகக் கொல்லப்பட்டான்.

3. பழைய, வீரன், தவறுதவன், வென்றான், பல, விற்க, அநியாயமாக—எதிர்ச் சொற்களைச் சொல்.

I. இதைப் படி :—

பாண்டியன் கோவலனைக் கொன்றான்.

இது ஒரு வாக்கியம். இது பொருள் முடிந்ததைக் காட்டுகிறது. இதில் 'கொன்றான்' என்னும் சொல் செயலைக் காட்டுகிறது. இப்படிச் செயலைக் காட்டும் வினைச் சொல் பயனிலை எனப்படும். பயனிலைக்கு முன் 'யார்' என்பதை வைத்து, "யார் கொன்றான்?" என்று கேள்வி கேட்டால், வரும் விடை பாண்டியன் என்பது. இவ்வாறு பயனிலைக்கு முன் யார் என்னும் கேள்வியை வைத்துக் கேட்டால், வரும் விடை எழுவாய் எனப்படும். பயனிலைக்கு முன் 'யாரை' என்பதை வைத்து, "யாரைக் கொன்றான்?" என்று கேள்வி கேட்டால் வரும் விடை 'கோவலனை' என்பது. இது செயப்படுபொருள் ஆகும்.

II. கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் கூறு :

நெடுஞ்செழியன் நீதியை மறந்தான்.
பாண்டியன் வட அரசர்களை வென்றான்.
புலவர்கள் தமிழை வளர்த்தார்கள்.
செழியன் தமிழை ஆராய்ந்தான்.
கோவலன் சிலம்பைத் திருடவில்லை.



## 26. கடிதம் எழுதும் முறை

1. வெளி ஊர்களில் உனக்கு உறவினர் இருக்கின்றார்கள் அல்லவா? அவர்களுக்கு, உன் பந்தாட்ட வெற்றியைப்பற்றி நீ தெரிவிக்க வேண்டும் என்றால் என்ன செய்வாய்? கடிதம் எழுதுவாய் அல்லவா? கடிதம் எப்படி எழுதுவது?

2. முதலில் காகிதத்தின் வலப்புற மூலையில் உன்னுடைய முகவரியும், தேதியும் எழுதவேண்டும். தந்தைக்கு நீ கடிதம் எழுதினால், "அன்புள்ள தந்தை அவர்களுக்கு வணக்கம்" என்று துவக்க வேண்டும். நீ தெரிவிக்க வேண்டியவைகளை இடையில் எழுதிய பின், "தங்கள் அன்புள்ள மகன்" என்று எழுதி, உன் கையெழுத்தைப் போட்டு முடிக்கவேண்டும். பின்வரும் கடிதத்தைக் கவனி.

12, திருமாவளவன் தெரு,
இராயபுரம், சென்னை.
10-9-'49.

அன்புள்ள தந்தை அவர்களுக்கு,

வணக்கம். நலம். தாயார், அண்ணன், தங்கை முதலியோர் நலம் அறிய விரும்புகின்றேன்.

இங்கே நான் நன்ருய்ப் படிக்கிறேன்; வகுப்பில் நான் முதல்வனுய் இருக்கிறேன். சென்ற வாரத்தில் இங்கு நடந்த பந்தாட்டத்தில் நான் வெற்றியடைந்தேன். எனக்கு ஒரு வெள்ளிக் கிண்ணம் பரிசளிக்கப் பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவிக்கின்றேன். அதனுல் ஆசிரியர்கள் என்னிடம் அன்பாய் இருக்கின்ருர்கள்.

நான் ஒவ்வொரு நாளும் மாலையில் வீட்டுக்கு வந்து சிறிது விளையாடிய பிறகு, பாடங்களைப் படிக்கிறேன். எனக்குத் தெரியாதவைகளை மாமா கற்றுக் கொடுக்கிருர். வணக்கம்.

தங்கள் அன்புள்ள
மகன்,
**அ. மணி**

திரு. அழகுவேலனுர் அவர்கள்,
25, கரிகாலன் தெரு,
சிதம்பரம்.

3. இவ்வாறு எழுதிய கடிதம் உரியவரிடம் சேர, தபால் உறை வாங்கி, அதில் அக்கடிதத்தை அடைத்து உறையின்மேல் முகவரி எழுதி அனுப்பவேண்டும். அல்லது தபால் கார்டு வாங்கி அதிலும் எழுதலாம். தபால் கார்டின் விலை முக்காலணு. தபால் உறையின் விலை இரண்டணு. இவை தபால் நிலையத்தில் கிடைக்கும்.

4. ஆசிரியருக்கு எழுதும் கடிதத்தின் இறுதியில், 'தங்கள் பணிவுள்ள மாணவன்' என்று குறிப்பிடவேண்டும். நண்பர்களுக்கு எழுதும் கடிதத்தின் இறுதியில் 'உன் அன்புள்ள நண்பன்' என்று குறிப்பிடவேண்டும். பெரியவர்களுக்கு எழுதும் கடிதங்கள் பணிவும் மரியாதையுடைய சொற்கள் உடையவைகளாய் இருத்தல்வேண்டும்.

| | | |
|---|---|---|
| உறவினர் | முகவரி | முதல்வன் |
| வெற்றி | இடையில் | உறை |
| வலப்புறம் | நலம் | தபால் தலை |

### அரும்பொருள்

உறவினர் - சொந்தக்காரர்கள். முகவரி - விலாசம். நலம் - சுகம். முதல்வன் - முதல் மாணவன். உறை - கூடு, 'கவர்'.

### கேள்விகள்

1. வெளியூரில் உள்ள உன் தாயாருக்கு கடிதம் எழுத நீ என்ன செய்வாய் ?
2. கடிதத்தில் எழுதவேண்டும் முதற் செய்திகள் எவை ?

3. கடிதம் எழுதியபின், தாயாரிடம் அது போய்ச் சேர என்ன செய்யவேண்டும் ?

4. முக்காலணுச் செலவில் காகிதம் எழுதுவது எப்படி ?

5. தபால் நிலேயம் என்பது என்ன ?

6. தபால் கார்டு—தபால் உறை—இவற்றைப் பார்த்திருக்கின்ருயா ?

7. அவை எப்படி இருக்கும் என்பதைத் தெரிவி.

## பயிற்சி

I. 1. பரீட்சைத் தேர்வுபற்றி உன் தாயாருக்கு ஒரு கடிதம் எழுது.

2. வெளியூர் சுற்றுப் பிரயாணம் பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

3. உன் அக்காள் திருமணத்திற்காக மூன்று நாள் விடுமுறை கேட்டு உன் ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுது.

4. வெற்றி, கடிதம், முகவரி, கையெழுத்து, துவக்கம், நலம், முதல்வன், தபால், உறை—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்.

II. கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலே, செயப்படுபொருள்களேக் கட்டத்தில் அமைத்துக் காட்டு :—

1. நீ பந்தயத்தை வென்ருய். 2. கந்தன் கடிதத்தை படித்தான். 3. நீ வேண்டியவைகளேக் கேள். 4. நான் பாடங்களேப் படிக்கிறேன். 5. மாமா தெரியாதவைகளேக் கற்பிக்கிருர்.

| எழுவாய் | பயனிலே | செயப்படுபொருள் |
|---|---|---|
| | | |




## 27. புகை வண்டி

1. பிள்ளைகளே! நீங்கள் புகைவண்டியில் ஏறிப்பிரயாணம் செய்திருக்கிறீர்களா? ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்கு விரைவாய்ப் போகப் புகைவண்டி உதவுகிறது. புகைவண்டியில் செல்ல ஏற்படும் செலவு மிகவும் குறைவானது.

2. புகைவண்டி, அதற்கென உள்ள தண்டவாளத்தின்மீதுதான் போகும். நிலத்தின்மீது ஒரே நேராக இரண்டு இரும்புக் கம்பிகள் பதித்திருப்பதே தண்டவாளம் ஆகும்.

3. புகைவண்டித் தொடரின் முதலில் ஓர் இஞ்சின் இருக்கும். அதனுடன் பத்துப் பன்னிரண்டு வண்டிகள் தொடராகக் கொக்கிகளால் இணைக்கப்பட்டிருக்கும். இஞ்சின் இவ்வண்டித் தொடரை இழுத்துக்

கொண்டு போகும். இஞ்சின் இல்லாவிட்டால் வண்டி ஓடாது.

4. இஞ்சினில் அதனை ஓட்டுபவரும் அவருக்குத் துணைவர் இருவரும் இருப்பர். வண்டித்தொடரில் பிரயாணிகள் தங்களுடைய சாமான்களுடன் ஏறிக்கொள்வார்கள். கடைசி வண்டியில் வண்டிக் காவலர் இருப்பார். இவர் பிரயாணிகளையும் சாமான்களையும் பாதுகாப்பவர். இவர், வண்டி புறப்படப் பகலில் பச்சைக் கொடி காட்டுவார். இரவில் பச்சை விளக்குக் காட்டுவார். இவர் வண்டியை நிறுத்தப் பகலில் சிவப்புக் கொடியையும் இரவில் சிவப்பு விளக்கையும் பயன்படுத்துவார்.

5. இஞ்சின் நீராவியால் ஓடுகிறது. இஞ்சினில் நிலக்கரியின் நெருப்புத் தகதக என எரிந்துகொண்டேயிருக்கும். நெருப்புக்கு மேலுள்ள அறையில் தண்ணீர் தளதள என்று கொதித்து நீராவி ஆகிக் கொண்டேயிருக்கும். நெருப்பும் நீரும் இல்லாவிட்டால் இஞ்சின் ஓடாது.

6. புகைவண்டியை ஓட்டுவதும் நிறுத்துவதும் இஞ்சின் ஓட்டி வேலை. நெருப்பு அணையாமல் பார்த்துக் கொள்வது இஞ்சினிலுள்ள மற்ற இருவர் வேலை.

7. நாம் புகைவண்டியை ரயில்வண்டி என்றும் கூறுகிறோம். பிரயாணிகளை ஏற்றிக் கொண்டு போகும் வண்டியைப்போல, பிரயாணிகள் இல்லாமல்

வெறும் சாமான்களை ஏற்றிப்போகும் வண்டிகளும் உண்டு. அவை 'சாமான் வண்டிகள்' எனப்படும்.

8. நீராவியின் வல்லமையை முதலில் கண்டு பிடித்தவர் ஜேம்ஸ் வாட் என்பவர் ஆவார். புகை வண்டியை முதலில் ஓட்டிக் காட்டியவர் ஜார்ஜ் ஸ்டீவன்சன் என்பவர் ஆவார். இன்று இந்த வண்டி நீராவியால் மட்டுமன்றி மின்சாரத்தாலும் ஓடுகிறது.

| | | |
|---|---|---|
| விரைவாக | வண்டித்தொடர் | நிலக்கரி |
| செலவு | துணைவர்கள் | தகதக |
| குறைவு | நீராவி | வல்லமை |
| தண்டவாளம் | இஞ்சின் | மின்சாரம் |

## அருஞ்பொருள்

விரைவாய் - வேகமாய். நீராவி - நீர் கொதித்துப் புகைபோல எழும் ஆவி.

## கேள்விகள்

1. புகைவண்டித் தொடர் எப்படி அமைந்திருக்கிறது ?
2. இஞ்சினில் யார் யார் இருப்பர் ?
3. வண்டிக்காவலர் வேலை என்ன ?
4. இஞ்சின் எப்படி ஓடுகிறது ?
5. இஞ்சின் ஓட்டியின் வேலை என்ன ?
6. 'சாமான் வண்டி' என்று எதற்குப் பெயர் ?
7. முதலில் புகைவண்டியை ஓட்டிக்காட்டியவர் யாவர் ?

## பயிற்சி

I. 1. பிரயாணம், விரைவாய், குறைவானது, உதவுகிறது, தொலைவு, தொடர், கொக்கி, இஞ்சின், அணையாமல், நிலக்கரி—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துச் சொல்.

2. தகதக, தளதள—இவை இரட்டைச் சொற்கள். இவற்றைப்போல வேறு ஐந்தைக் கூறு.

3. விரைவு, குரைவு, நீண்ட, பகலில், ஓடுகிறது, உண்டு—எதிர்ச் சொற்களைக் கூறு.

II. இவற்றைக் கவனி :

புகை வண்டி நீண்ட தொலைவு சலியாமல் ஓடும். இது ஒரு வாக்கியம். இதில் ஆறு சொற்கள் இருக்கின்றன. சொற்கள் என்பவை எழுத்துக்களால் ஆனவை. புகைவண்டி என்னும் சொல் ஐந்து எழுத்துக்களால் ஆனது.

எழுத்துக்கள் மூன்று வகை ஆகும்.

அம்மி

(1) அ என்பது தனித்து ஒலிக்கும். அது உயிர் எழுத்து எனப்படும். உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டு. அவை அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்பவை.

(2) ம் போன்ற புள்ளி எழுத்துக்கள் தனித்து ஒலிக்கமாட்டா. அவை மெய்யெழுத்துக்கள் எனப்படும். அவை பதினெட்டாகும். அவை—க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் என்பவை.

(3) மி என்னும் எழுத்து மெய்யும் உயிரும் சேர்ந்தது (ம்+இ=மி). இது உயிர்மெய் எழுத்து எனப்படும். இப்படிப் பன்னிரண்டு உயிர்களும் பதினெட்டு மெய்களோடும் சேரும். ஆதலால், உயிர்மெய் எழுத்துக்கள் 18×12=216 ஆகின்றன.



# 28. திருடரை ஏய்த்த திறமை

(நாடகம்)

## காட்சி 1

இடம் : விஜயநகரத்தில் தெனாலிராமன் வீடு.

காலம் : இரவு.

ஆட்கள் : தெனாலிராமன், அவன் மனைவி, திருடர்கள்.

[தெனாலிராமன் வீட்டுக் கூரைமீது திருடர்கள் ஒளிந்திருக்கின்றனர். இதை ராமன் தெரிந்துகொண்டும், தெரிந்துகொள்ளாதவன் போல நடிக்கிறான். சமையலறைக்குச் சென்று திருடர் வந்துள்ள செய்தியை தன் மனைவியிடம் இரகசியமாகக் கூறித் திருடர்களை ஏமாற்ற வேண்டிய வழிகளையும் எடுத்துச் சொல்லுகிறான். பிறகு, இருவரும் சமையலறையை விட்டு, வெளி அறையில் வந்து உட்காருகின்றனர்.]

**இராமன் :** (உரத்த குரலில்) ஊரில் வரவரக் கள்வர் பயம் பெருகிவிட்டது. நாம் மிகுந்த கவனத்துடன் இருக்கவேண்டும். கதவுகளை எல்லாம் சரியாகத் தாளிட்டனையா ?

மனைவி : ஆமாம். திருடர் பயம் மிகுந்துவிட்டது என்று நானும் கேள்விப்பட்டேன். முன் வாயில் கதவு, தோட்ட வாயில் கதவு எல்லாவற்றையும் பொழுது சாய்ந்தவுடனே தாளிட்டுவிட்டேன்.

இராமன் : (யோசிப்பது போலப் பாசாங்கு காட்டி) கதவுகளைத் தாளிடுவதுமட்டும் போதும் என்று எனக்குத் தோன்றவில்லை. கூரையைப் பிய்த்துக் கொண்டு திருடர் இறங்கினால் என்ன செய்வது?

மனைவி : ஆமாம். அது யோசிக்கப்பட வேண்டிய விஷயம்தான்.

இராமன் : (சற்றுப் பேசாமலிருந்து பிறகு) எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது!

மனைவி : என்ன யோசனை?

இராமன் : நாம் நம்மிடம் இருக்கிற பணம், நகை முதலியவைகளை (ஒரு பெட்டியை சுட்டிக்காட்டி) இந்தப் பெட்டியில் போட்டுப் பூட்டி, நம் தோட்டத்திலுள்ள கிணற்றில் போட்டு வைப்போம். திருடர் பயம் குறைந்தபின் எடுத்துக்கொள்ளலாம்.

மனைவி : அது மிகவும் நல்ல யோசனை. அப்படியே செய்வோம். நாம் செய்வது யாருக்கும் தெரியக் கூடாது. இப்போதே எல்லாவற்றையும் இப் பெட்டியில் அடைத்து, நாம் இருவருமே சேர்ந்து இப்பெட்டியைக் கொண்டுபோய்க் கிணற்றில் இறக்கி விடலாம்.

இராமன் : சரி, அப்படியே செய்வோம்.

[இராமனும் அவன் மனைவியும் பெட்டியில் நிறைய கற்களைப் போட்டுப் பூட்டி, அதை இருவருமாகச் சுமந்து சென்று, கிணற்றில் போட்டுவிட்டுத் திரும்புகின்றனர். கூரை மீதிருந்த திருடர்கள் வீட்டிற்குள் நுழையும் சங்கடமில்லாமல் கிணற்றிலிருந்தே பணத்தைக் கொண்டுபோக வழி கிடைத்தது என்று மகிழ்கின்றனர்.]

## காட்சி 2

இடம் : தோட்டம்.

காலம் : இரவு.

ஆட்கள் : திருடர்கள், இராமன்.

[இராமனும் அவன் மனைவியும் வீட்டிற்குள் சென்றபின், திருடர்கள் கிணற்றில் இறங்க முயல்கின்றனர். தண்ணீர் நிறைய இருந்தபடியால், ஏற்றங்களைப் பிடித்துத் தண்ணீரை இறைக்கின்றனர். இராமன் திருடர்களுக்குத் தெரியாமல் தோட்டத்திற்குள் வந்து திருடர்கள் இறைத்த நீரை எல்லாப் பாத்திகளுக்கும் பாய்ச்சுகிறான்.]

**முதல் திருடன் :** அண்ணே, இறைக்க இறைக்கத் தண்ணீர் வற்றவில்லையே! இது சுரப்புக்கிணறு, அண்ணே !

**இரண்டாம் திருடன் :** தண்ணீர் குறைகிறது; இன்னும் சிறிது நேரம் இறைத்தால் வற்றிவிடும்.

[சிறிது நேரம் கழித்து]

**மூன்றும் திருடன் :**—அண்ணே, பொழுது வெளுக்கிறது. எவரேனும் நம்மைக் கண்டுவிடுவார்கள். ஓடிவிடலாம். நாளை இரவு பார்த்துக்கொள்ளலாம்.

[ஓட முயல்கின்றனர்]

**இராமன் :** அன்பர்களே, உங்கள் உதவிக்கு நன்றி. நீங்கள் இறைத்த நீரை எல்லாச் செடிகளுக்கும்

பாய்ச்சிவிட்டேன். இனி நீங்கள் இறைக்க வேண்டுவதில்லை. உங்கள் அன்பையும் உதவியையும் என்றும் மறக்கமாட்டேன்.

[திருடர்கள் வெட்கமடைந்து, தப்பினால் போதுமென்று ஓடி விடுகிறார்கள்.]

| | | |
|---|---|---|
| உரத்த | யோசனை | உழைப்பு |
| வாயில் | இறைத்த | சுரப்பு |
| தாளிட்டு | பாய்ச்சி | வற்றவில்லை |

## அரும்பொருள்

தெனாலி - ஓரூர். பெருகி - அதிகமாகி. பொழுது சாய்ந்தவுடன் - சூரியன் மறைந்தவுடன். சுரப்புக் கிணறு - தண்ணீர் எடுக்க எடுக்க வற்றாமல் இருக்கும் கிணறு. பொழுது வெளுத்தல் - இருள் நீங்கி வெளிச்சம் ஆதல்.

## கேள்விகள்

1. திருடர்களை ஏமாற்றத் தெனாலிராமன் செய்த தந்திரம் என்ன ?

2. பெட்டி கிணற்றில் விழுந்தபோது திருடர்கள் என்ன நினைத்தனர் ?

3. திருடர்கள் பிறகு என்ன செய்தனர் ?

4. இராமன் திருடர்களின் உழைப்பை எவ்வாறு பயன் படுத்தினான் ?

5. பொழுது விடிந்ததும் இராமன் திருடர்களிடம் என்ன கூறினான் ?

## பயிற்சி

1. இப்பாடத்தை இருபது வரிகளில் சுருக்கி ஒரு கதையாக எழுது.

2. அஞ்சாமல், தெரிந்துகொள்ளாதவன் போல, பொழுது சாய்ந்த உடனே, சுரப்புக் கிணறு—இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறு.

# செய்யுட் பாடம்

## 1. ஆத்திசூடி

1. உடையது விளம்பேல்.
2. இணக்கமறிந்து இணங்கு.
3. கண்டு ஒன்று சொல்லேல்.
4. கடிவது மற.
5. ஙப்போல் வளை.
6. இயல்பு அலாதன செயேல்.
7. அனந்த லாடேல்.
8. கீழ்மை அகற்று.
9. குணமது கைவிடேல்.
10. கூடிப் பிரியேல்.
11. சுளிக்கச் சொல்லேல்.
12. செய்வன திருந்தச் செய்.
13. தூக்கி வினைசெய்.
14. தேசத்தோடு ஒத்துவாழ்.
15. தொன்மை மறவேல்.
16. நீர் விளையாடேல்.
17. நேர்பட ஒழுகு.
18. பிழைபடச் சொல்லேல்.
19. புகழ்பட வாழ்.
20. பெரியாரைத் துணைக்கொள்.
21. மிகைபடச் சொல்லேல்.
22. ஊருடன் கூடி வாழ்.
23. மேன்மக்கள் சொற்கேள்.

24. வல்லமை பேசேல்.
25. ஓரம் சொல்லேல்.
26. உத்தமனாய் இரு.
27. வெட்டெனப் பேசேல்.
28. ஓதுவது ஒழியேல்.
29. தந்தை தாய்ப் பேண்.
30. நன்றி மறவேல்.

—ஔவையார்

## 2. கொன்றைவேந்தன்

1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
2. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.
3. உரவோர் என்கை இரவாதிருத்தல்.
4. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
5. எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.
6. ஏவா மக்கள் மூவா மருந்து.
7. ஓதாதார்க்கு இல்லை உணர்வொடு ஒழுக்கம்.
8. ஔவியம் பேசுதல் ஆக்கத்திற்கு அழிவு.
9. கிட்டாதாயின் வெட்டென மற.
10. கீழோராயினும் தாழ உரை.
11. குற்றம் பார்க்கிற் சுற்றம் இல்லை.
12. கூரம் பாயினும் வீரியம் பேசேல்.
13. கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.
14. சுற்றத்திற் கழகு சூழ இருத்தல்.
15. சூதும் வாதும் வேதனை செய்யும்.
16. சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்.

17. தந்தைசொல் மிக்க மந்திரம் இல்லை.
18. தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை.
19. திரைகடல் ஓடியும் திரவியம் தேடு.
20. தீராக் கோபம் போராய் முடியும்.
21. தேடாது அழிக்கின் பாடாய் முடியும்.
22. தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது.
23. தோழனோடும் ஏழைமை பேசேல்.
24. நல்லிணக்கம் அல்லது அல்லற் படுத்தும்.
25. நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை.
26. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி.
27. பாலோடு ஆயினும் காலமறிந்து உண்.
28. புலையும் கொலையும் களவும் தவிர்.
29. மாரியல்லது காரியம் இல்லை.
30. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
31. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.
32. வானம் சுருங்கின் தானம் சுருங்கும்.

—ஔவையார்

## 3. வெற்றிவேற்கை

1. கல்விக் கழகு கசடற மொழிதல்.
2. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
3. மன்னவர்க் கழகு செங்கோல் முறைமை.
4. அறிஞர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்.
5. வறிஞர்க் கழகு வறுமையில் செம்மை.
6. பெரியோர் எல்லாம் பெரியரும் அல்லர்.
7. சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்.

8. பெற்றோர் எல்லாம் பிள்ளைகள் அல்லர்.
9. உற்றோர் எல்லாம் உறவினர் அல்லர்.
10. ஞானிக் கில்லை இன்பமும் துன்பமும்.
11. அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.
12. நாளும் கிழமையும் நலிந்தோர்க் கில்லை.
13. கேளும் கிளையும் கெட்டோர்க் கில்லை.
14. கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டில்
கடும்புலி வாழும் காடு நன்றே.
15. சான்றோர் இல்லாத் தொல்பதி இருத்தலின்
தேன்தேர் குறவர் தேயம் நன்றே.

—அதிவீரராம பாண்டியன்

# குறிப்புரை

## 1. ஆத்திசூடி

(1) உடையது - தன்னுடைய ஏழைமைநிலை, விளம்பேல் - சொல்லாதே. (2) இணக்கம் - நல்ல குணம், நல்ல செயல்கள். (3) கண்டு - ஒன்றைக் கண்டு. ஒன்று - வேறு ஒன்று. (4) கடிவது - கோபித்துப் பேசுவது. (5) வளை - உன் இனத்தைத் தழுவு. (6) இயல்பு அலாதன - இயற்கைக்கு மாறானவைகள். (7) அனந்தல் - தூக்கம், ஆடேல் - அதிகமாகச் செய்யாதே. (8) கீழ்மை - இழிவானவைகள். (11) சுளிக்க - கேட்பவர் கோபிக்கும் படி. (12) தூக்கி - ஆராய்ந்து பார்த்து. (15) தொன்மை - பழைய சினேகம். (16) நீர் - ஆழமாக உள்ள நீர்நிலை. (17) நேர்பட - ஒழுக்கம் கெடாமல். ஒழுகு - நட. (21) மிகைபட - அளவுக்கு மேலாக. (24) வல்லமை - சாமர்த்தியம். (25) ஓரம் - ஒருதலைப் பக்கம். (27) வெட்டன - கத்தி வெட்டைப்போல.

## 2. கொன்றைவேந்தன்

(1) முன்னறி - முதலில் அறிந்த. (2) ஈயார் - கொடுக்காதவர். தேட்டை - செல்வம். (3) உரவோர் - வல்லவர். என்கை - என்று சொல்லப்படுதல். இரவாது - பிச்சை எடுக்காமல். (4) வேருடன் - வம்சத்துடன். (6) ஏவா - சொல்லாமலே செய்கிற. மூவாமருந்து - தேவாமிருதம். (7) உணர்வொடு - அறிவுடனே. (8) ஔவியம் - பொறாமைச் சொற்கள். ஆக்கத்திற்கு - செல்வத்திற்கு. (9) கிட்டாதாயின் - கிடைக்காமற்போனால். வெட்டெ‌ன - உடனே. (12) கூர் அம்பு - கூர்மையான அம்பு. வீரியம் - வீரத்தனம். (16) தேம்பி - வருந்தி. (19) திரைகடல் - அலைவீசும் கடல். (20) போராய் - சண்டையாய். (21) பாடாய் - வருத்தமாக. (24) நல்இணக்கம் -

நல்ல நட்பு. அல்லல் - துன்பம். (26) நுண்ணிய - சிறிய. (27) பாலோடு - பாலுடன் கூடிய. (28) புலை - மாமிசம் சாப்பிடுவது. (29) காரியம் - எந்த வேலையும். (30) செய்யின் - (தீங்கு) செய்தால். (32) தானம் - தருமம். சுருங்கும் - குறையும்.

## 3. வெற்றிவேற்கை

(1) கசடு அற - குற்றம் நீங்க. (2) செழுங்கிளை - நல்ல சுற்றம். (3) முறைமை - நீதிசெலுத்தும் முறை. (4) கற்று உணர்ந்து அடங்கல் - நூல்களைக் கற்றுப் பொருளை உணர்ந்து அடங்கியிருத்தல். (5) வறிஞர் - வறுமையுடையோர். (8) பெற்றோர்- பெறப்பட்டவர்கள். (9) உற்றோர் - நெருங்கி உள்ளவர்கள். (11) அறிவிலோர் - அறிவில்லாதவர். (12) நலிந்தோர் - நோயால் மெலிந்தவர். (13) கேளும் கிளையும் - நட்பும், உறவும். கெட்டோர்க்கு - வறுமையுற்றவர்க்கு. (15) சான்றோர் - பெரியோர். தொல்பதி - பழமையாகிய நகரம். தேன்தேர் - தேனை ஆராய்ந்து எடுக்கும்.



# DESEEYA TAMIL VACHAGAM

BOOK III FOR STANDARD III

BY

T. P. GOPALAKRISHNAN, B.A., L.T.
*Headmaster, Board High School, Polur*



*Price Annas 7/-*